# Ūḻiyaṉ

## Malar 14, itaḻ 3

## July 20, 1934

Record no. 148

# ஊழியன்

ஆசிரியன்—ராய. சொக்கலிங்கன்.

மலர் கச. சென்னை, பவ ௵ ஆடி ௴ 5௳, வெள்ளி (20-7-1934) இதழ் ரு.


இந்தியத்தாய் முடிசூடி எழிற்சிங்கா
தனமேறி ஈடி லாது
சொந்தவர சேபுரியத் துயர்போக்கி
யாவருமே சுகவாழ் வெய்த
இந்தநிலம் வந்தவருள் இலைபிறப்பில்
இழிவுயர்வென் இயற்கை ஓங்க
நந்தலிலா ஊழியமே நான் கொண்டேன்
நல்லனவெந் நாளும் வாழ்க !

## வல்லபாய் விடுதலை.

காங்கிரஸ் தலைவர் சர்தார் வல்லபாய் படேல் இவ் வாரம் விடுதலை செய்யப் பெற்றார். அப்பெரியாருக்கு நல்வரவு கூறுவோம். 1932 ஜனவரி மூன்றும் நாள் இரவு சர்தார் படேல் கைது செய்யப் பெற்றார். இப்போது நடந்த தேசீயப் போராட்டத்தில் முதல் முதலில்—ஒரே சமயத்தில் கைது செய்யப்பட்டவர் காந்தியடிகளும் வல்லபாய் படேலுமே. காந்தியடிகட்கு இடையிடையே விடுதலையும் சிறை வாழ்வும் மாறி மாறி நிகழ்ந்தன. வல்லபாய் போருக்குக் கொடிக் கட்டிய அன்றுமுதல் இந் நாள் காறும் இரண்டரை ஆண்டுகளாகச் சிறையிலேயே இருந்தார். சர்தார் விசாரணை செய்து தண்க்கப்பட வில்லை. பம்பாய் ரகுலேஷன்படி சிறை வைக்கப் பெற்றிருந்தார். அவரை அரசாங்கத்தார் தாமாகவே இப்போது விடுதலை செய்தார்.



தாம் விடுதலை செய்யப்படுவது பற்றி எதுவும் தமக்குத் தெரியாதெனவும் திடீரெனத் தாம் விடுவிக்கப்பட்டதாக்வும் விடுதலைக்குக் காரணம் தமது பிணியாக இருக்கலாம் எனவும் சர்தார் கூறுகிறார். தமது உடன் பிறந்த சகோதரரும் உலகத்தாரால் நன்கு மதிக்கப் பெற்றவரும் இந்தியச் சட்ட சபையின் ஒப்பற்ற முதல் இந்தியத் தலைவருமாகிய விட்டல்பாய் படேலின் உயிர் நீத்த உடலைக்காண நமது வல்லபாய் விடுதலை பெறுவார் என அன்று கருதப்பட்டது. ஆனால் நிபந்தனையில் விடுதலை பெறச் சர்தார் விரும்பவில்லை. சகோதரர் உடலை இனிக்காணச் சந்தர்ப்பமில்லா நிலையில் கடைசி முறையாகக் காண வேண்டுமென்ற ஆசை வல்லபாய்க்கு இல்லையென யாரும் கூறமாட்டார். அதை விடத் தன் மதிப்பே பெரிதென நினைத்தார் வல்லபாய்.

வல்லபாயின் செயலை அறிந்தோர் இதில் வியப்படைய மாட்டார். தாங் கொண்ட கொள்கையைச் செய்கையிற் காட்டச் சிறிதும் தயங்காத வீரர் வல்லபாய். வீண் ஆரவாரம் எதுவும் அவருக்குப் பிடிக்காது. வேதாரண்யத்தில் நடந்த தமிழ் மாகாண மகாநாட்டில் தலைமை வகித்த போது "எனது சகோதரர் சட்ட சபையில் செய்யும் வாண

வேடிக்கை என்னை மயக்கவில்லை" எனப் படேல் மொழிந்த சீரிய உரை தமிழர் காதுகளில் இன்னும் ஒலித்துக் கொண்டிருக்கும் என நம்புகிறோம். சட்ட சபையில் அந்நாள் தலைமை வகித்த நமது வல்லபாயின் சகோதரர் விட்டல்பாய் அங்கு தம்மாற் செய்யக் கூடியது எதுவோ அதைத் திறம்படச் செய்து கொண்டிருந்தார். அதைச் சுட்டியே வல்லபாய் அதன் பயனின்மையை விளக்கி இவ்வாறு இயம்பினர்.

இன்றும் சட்ட சபை விஷயத்தில் வல்லபாய் அக்கருத்தையே கொண்டிருக்கிறார். ஆனால் காங்கிரஸ் ஆணைக்குக் கீழ்ப்படிந்து நடக்கத் தாம் தயாராக இருப்பதாகவும் காங்கிரஸ் பிரதிநிதியாகச் சட்ட சபை செல்வார்க்கு வெற்றிதர முயல வேண்டுவது தேசத்தார் கடனெனவும் வல்லபாய் வழுத்துவது முற்றும் நேர்மையே யாகும். விடுதலை பெற்ற நமது தலைவர் வல்லபாய் விரைவில் குணமுற்று வாழ இறையருள்வதாக!

---

# இடிமுழக்கம்

## சபாஷ் ராமநாதபுரம்!

மாகாண ஹரிஜன சேவக சங்கம் வெளியிட்டிருக்கும் அறிக்கையின் ஒரு பகுதி, சென்ற மே மாதம் தமிழ் நாட்டில் திறந்த இருபத்தொரு ஹரிஜன பாடசாலைகளில் ஒன்பது இராமநாதபுரம் ஜில்லாவி லிருக்கின்றன வென்றும், ராமநாதபுரம் நீர்நிலை யொன்றி லிருந்து தாராளமாகத் தண்ணீர் எடுக்க ஹரிஜனர்கள் அநுமதிக்கப்படுகின்றார்களென்றும் குறிப்பிடுகின்றது. இந்தச் செய்தியைக் கேட்டால் யாரும் சந்தோஷப்படாம லிருக்க முடியாது. இந்தியாவில் மிகக்கொடுமையாக ஆதித்திராவிடர்களை நடத்திய ஒரு பகுதியென்று எங்கும் பேசப்பட்டு வந்த இராமநாதபுரம் ஜில்லா ஏனைய ஜில்லாக்களை விட ஆதித்திராவிடர்கட்கு உரிமையளிக்க முன்வந்தால், எவ்வளவுதான் புகழ முடியாது! மேலும், ஆதித்திராவிடர்களை ஒரு குளத்தில் தண்ணீரெடுக்க அனுமதிப்ப தென்றால் தமிழ் நாட்டிலேயே அத்தகைய நிகழ்ச்சி ஒரு சில ஊர்களைத் தவிர எங்கும் நடந்திருக்க முடியாது! இங்ஙனம் இராமநாதபுரம் ஜில்லா மெச்சத்தகுந்த வேலையைச் செய்து வருமானால் இன்னும் சில மாதங்கட்குள் நாட்டார்—ஹரிஜனர் கலகம் போன்றவைகளெல்லாம் பழங்கதைகள் என்று நினைக்கும்படியான நிலைமைக்கு வந்து விடுமென்று நம்பலாம்.

## ஹோர் சமாதானம்

ஜூலை 14-ந்தேதி சர்தார் வல்லபாய் படேல் சிறையிலிருந்து விடுதலை செய்யப்பட்டது சம்பந்தமான பிரஸ்தாபம் பார்லிமெண்டில் வந்தபோது டாம் ஸ்மித் என்ற ஒரு அங்கத்தினர் "பண்டித ஜவஹர்லால் நேருவை விடுதலை செய்வது பற்றி சர்க்கார் அபிப்பிராயமென்ன?" வென்று கேட்டார். அதற்கு இந்தியா மந்திரியாகிய திரு. சாமுவேல் ஹோர் "ஜவஹர்லால் நேரு தேசியப் போராட்டம் காரணமாகக் கைது செய்யப்படவில்லை; ஆகவே அவரை விடுதலை செய்வது பற்றி ஆலோசிப்பதற்கே இடமில்லை" என்று கூறிவிட்டார் என்று ஒரு லண்டன் செய்தி கூறுகிறது. இது உண்மையாகவிருக்குமானால் திரு. ஹோரின் பதில் நகைப்பிற் கிடமானதாகும். தேசியப் போராட்டம் சம்பந்தமாகக் கைதியானவர்களைத்தான் விடுதலை செய்ய வேண்டுமென்பது அவரது கருத்தாகவிருக்குமானால், இன்னும் தேசியக் கைதிகளாகப் பற்பல சிறைகளிலுமிருக்கும் நூற்றுக் கணக்கானவர்களை ஏன் விடுதலை செய்யவில்லை யென்று நாம் கேட்க நமக்கு உரிமையுண்டு. மேலும் அரசாங்கக் கைதிகளாகப் பிடித்துத் தண்டனைக் காலம் குறிப்பிடாதபடி வைக்கப்பட்டிருக்கும் ஸ்ரீ காபர்கான் போன்றவர்களை ஏன் விடுதலை செய்யவில்லை என்றும் கேட்கலாம். பண்டித ஜவஹர்லாலுக்கு அரசாங்கத்தின் மீது சட்டமறுப்புக்காரர்கள் காண்பிக்கின்ற நேசப் போராட்ட உணர்ச்சியைத் தவிர வேறு எவ்விதமான துவேஷ எண்ணமும் இருக்க வழியில்லை. திரு. டாம் ஸ்மித், தம்முடல் பொருளெல்லாம் தியாகம் செய்து நாட்டின் நலத்தையே தேடுபவராகிய ஒரு வீரர் சிறையிலிருப்பதைப் பொறுக்க முடியாமல்தான் பண்டிதரை விடுதலை செய்யுங்கள் என்று கேட்டிருக்கலாமென்று நம்புகிறோம். சட்டமறுப்பியக்கம் நிறுத்தப்பட்டுப் போராட்டம் சிறிது நின்றிருக்கின்ற இவ்வேளையில் திரு. ஹோர் புனராலோசனை செய்து தகுந்தபடி நடந்து கொள்வாரென்று எதிர்பார்க்கலாம்.

## வருந்துகிறோம்

இம்மாதம் (ஜூலை) 14-ந் தேதியன்று பச்சையப்பன் கலாசாலை ரசாயனப் போசிரியராக விருந்த திரு. பி. லக்ஷ்மிநரசு அவர்கள் காலகதியானார்களென்று அறிந்து வருந்துகிறோம். திரு. நரசு அவர்கள் ரசாயன சாஸ்திரத்தில் மிகுந்த தேர்ச்சி யுடையவரும் பல அரும் பெரும் தத்துவங்களைக் கண்டுபிடித்தவருமாவர். ஏராளமான தமிழ் ஆங்கில நூல்களைக் கற்றறிந்த இவர் ஓர் பெரிய அறிவியல் வாதியும் பௌத்த மதத்தில் அதிகமான பற்றுக்கொண்டவருமாவர். தம் வாணாளில் இயன்ற அளவு ஆங்காங்கு பௌத்த மத சித்தாந்தங்களை விளக்கிப் பேசியிருக்கிறார். நல்ல வாக்குவன்மையும், சாந்தகுணமும், தரும சிந்தனையுமுடைய இவருக்கு வடமொழியிலும் பயிற்சியுண்டு. பிரசங்கங் களினிடையே வடமொழி சுலோகங்களை எடுத்துக்கூறி, புத்தரின் அறிவியல் கொள்கைகளை நிலைநாட்டுவது கேட்போர் காதுகட்கு இன்பம் பயக்குமென்பதில் சந்தேகமில்லை. இவ்வறிஞர் காலகதியானது பற்றிய நம் அனுதாபத்தை அவர் குடும்பத்தாருக்குத் தெரிவித்துக் கொள்கிறோம்.

---

**எல்லைப்புறக் காந்தியின் பந்துக்கள் விடுதலை**

எல்லைப்புறக் காந்தியின் மருமக்களாகிய அதௌலானும், சாதுல்கானும் சனிக்கிழமை யன்று காசிச் சிறையிலிருந்து விடுதலை செய்யப்பட்டனர்.

---

**சுதந்தரமே உயிர்.**



# "ஊழிய"னைப் பற்றிய மதிப்புரைகள்

## "இந்தியா"

11–7–34.

காரைக்குடியிலிருந்து வெளிவந்து கொண்டிருந்த "ஊழியன்" வாரப்பத்திரிகையை அறியாதார் தமிழுலகத்தில் அதிகப்பேர் இருக்க மாட்டார்கள். அதன் ஆசிரியர் திரு. ராய. சொக்கலிங்கன் சுதந்தரப்போரில் ஈடுபட்டுச் சிறை சென்றதின் பயனாய் "ஊழியன்" சிறிது காலம் நின்றிருந்தது. இப்பொழுது சென்னையிலிருந்து தேசீய வாரப் பத்திரிகையாக வெளிவரத் தொடங்கியிருக்கிறது. நமது முன் இருக்கும் முதல் இதழில் அநேக ருசிகரமான கட்டுரைகளும் கதைகளும் பாடல்களும் அடங்கியிருக்கின்றன. தமிழ்நாட்டார் ஊழியனை ஆதரிக்க முன் வருவார்கள் என்று நம்புகிறோம்.

## "தாருல் இஸ்லாம்"

11–7–34.

காரைக்குடியில் இதுவரை நடந்து சிறிது காலமாய் நிறுத்தப்பட்டிருந்த "ஊழியன்" பத்திரிகை சென்னை, தம்புசெட்டி தெரு 56-ம் நெம்பர் காரியாலயத்தி லிருந்து வாரப் பத்திரிகையாக ஜூலை 6-ந் தேதியிலிருந்து மீண்டும் வெளியிடப்படுகிறது. தேசப் பணியாற்றித் தேச விடுதலைக்காக ஓராண்டு சிறைசென்று மீண்ட திரு. ராய. சொக்கலிங்கஞ் செட்டியார் அதற்காசிரியராய் அமர்ந்து அதனை அழகுபட வெளியிட்டிருக்கின்றார். ஊழியன் சித்திர வாரப் பத்திரிகையாய் வெள்ளிக்கிழமை தோறும் வெளிவருகின்றது. பல அழகிய கட்டுரைகளும் ஸ்ரீ செட்டியாரின் "எந்நாட் கண்ணிகளும்" சித்திரக் கவிகளும், தமிழ் வளர்ச்சிக்கான முறையில் காணப்படுகின்றன. டெம்மி 1x4 அளவில் 50 பக்கங்களுடையதாய் அழகிய சித்திரப் படங்களுடன் மிளிர்கின்றது.

## "லோகோபகாரி"

12–7–34.

செட்டிமார் நாட்டிலுள்ள காரைக்குடியில் தோன்றி நிலவிச் சில காலம் மறைந்திருந்த ஊழியன் வாரப்பத்திரிகை சென்ற வாரம் சென்னையிலிருந்து புத்துயிரும் புது உடலும் கொண்டு தோன்றி யிருக்கிறது. கண்டார் மகிழும் உடலும் கருத்தைக் கவரும் உரைகளும் உடையதாய் ஊழியன் தோன்றியிருக்கின்றான். அழகிய படங்கள் பல இதில் மிளிர்கின்றன. ஆசிரிய ராய. சொக்கலிங்கனாது பாடல்களும் ஊழியனை அழகு செய்கின்றன. செட்டிமார் நாட்டில் தோன்றிய அன்பர் ராய. சொக்கலிங்கன் செந்தமிழ்நாட்டு அறிஞர்களுள் ஒருவராவர். அவரது தலைமையில் ஊழியம் புரியும் ஊழியனைத் தமிழுலகத்தார் ஆதரிப்பார்களாக.

## "தமிழ்நாடு"

14–7–34.

இந்த வாரப் பத்திரிகையின் முதலிரண்டு வெளியீடுகள் எமது பார்வைக்கு வந்தன. இப்பத்திரிகை ஸ்ரீ ராய. சொக்கலிங்கம் அவர்களை ஆசிரியராகக் கொண்டு காரைக்குடியில் நீண்ட காலமாக வெளிவந்து தமிழ்நாட்டுக்குச் செய்த சேவைகளைத் தமிழர்கள் மறந்திருக்க மாட்டார்கள். இப்பொழுது இது இரண்டு வாரங்களாகச் சென்னையில் வெளிவந்து கொண்டிருக்கிறது. இரண்டு வெளியீடுகளிலும் தேசீய மணமும்,

# தீண்டாமைப் புண்!




இந்துமதம் என்னும் மனிதனின் உடம்பிலிருக்கும் பிளவைகளை அறுத்துச் சுத்தஞ்செய்ய முயல்கின்றார் மகாத்மா. அதனை வைதீகர்கள் தடை செய்கின்றனர்.

தமிழ் மணமும் கமழும் கட்டுரைகள் பல மிளிருகின்றன. சிறந்த தமிழ்ப் பாக்களும், இலக்கிய ஆராய்ச்சியும் வெளிவருவது குறிப்பிடத் தக்கதாகும். சித்திரப்படங்களும் வெளியிடுகிறார்கள்.

### "வீரகேசரி"

15-7-34.

புதிய உருக்கொண்டு வெளிவந்திருக்கும் "ஊழிய"னின் முதல் இதழ் வரப்பெற்று மகிழ்வுற்றோம். மிக்க அழகிய முறையில் ஆங்கில சஞ்சிகைகளோடொப்பக் காணப்படுகின்றான். "ஊழியன்" தமிழ் நாட்டிற்கு அதிலும் தனவணிகர் வாழும் தென்னாட்டிற்குப் புதியவனல்லன். இன்றைக்குப் பதினொன்கு ஆண்டுகட்கு முன்னர் 'ஊழியன்' காரைக்குடியில் தோன்றினான். அரசியல் நெருக்கடியாலும் பொருள் செழிப்பின்மையாலும் மூன்று சந்தர்ப்பங்களில் அவன் வெளிவரா திருந்தான். சென்ற ஓராண்டாக ஓய்வு பெற்றிருந்த "ஊழியன்" இன்று புதிய பலத்தோடும் பணச் செழிப்போடும் சென்னையிலிருந்து பிரதிவாரமும் வெளிவந்து கொண்டிருக்கிறான். வேறு பல நலன்களோடும் நண்பர் ராய சொக்கலிங்கம் அவர்களே இன்றும் "ஊழிய"னின் ஆசிரியராக விளங்குகின்றார். தேசப் பற்றும் நெறியான வாழ்க்கையும் எழுத்தவன்மையும் படைத்த திரு. சொக்கலிங்கன் அவர்களைப்பற்றி நாம் விசேஷமாக எழுத விரும்பவில்லை. அவர்களின் தலைமையில் நடைபெற்று வரும் "ஊழியன்" நீண்ட வாழ்வுபெற்று நல் ஊழியம் புரிவானென்று நம்புகிறோம்.

---

### அற்புத ஹரிஜனச் சிறுவன்

ஸ்ரீ அனுசூயா பென் அவர்களால் ஆதித்திராவிடர்கட்காக அமதாபாத்தில் நடத்தப்பட்டு வரும் பால கிருஹத்தில் ஓர் ஹரிஜனச்சிறுவனிருக்கிறான். அவன் வயது ஏழதாயிற்று. தபேலா மிக இனிமையாக வாசிக்கிறான். அங்கு சங்கீதம் போதிப்பது அவன்தான். அவனைக் காந்திஜீ பார்த்துவிட்டு வெகுவாகப் பாராட்டினார்.

### அரசமரப் பிரதிஷ்டை

காந்திஜி தம் விஜய ஞாபகார்த்தமாகத் தம்மை வரவேற்றுபசரித்தவர் வீட்டில் ஒரு அரசமரக்கன்றைப் பிரதிஷ்டை செய்வார் என லாகூர்ச்செய்தி கூறுகிறது.

## சிதம்பரம்—ரங்கம்மாள் திருமணம்

திருச்சி புரோகித மறுப்புச் சங்கத்தினாதரவில் ஜூலை 14-ந் தேதி மாலை 5 மணிக்கு தேவதானம் கருணாநிதிப் பார்க்கில், கோட்டையூர் தோழர் எ. எல். சிதம்பரம் அவர்களும், சென்னை தோழர் டி. ரங்கம்மாள் அவர்களும் கல்யாணம் செய்து கொண்டனர். மணமகள் ரெட்டியார் வகுப்பைச் சேர்ந்தவரும், மணமகன் தனவணிக சமூகத்தைச் சேர்ந்தவருமாவர். திருமணத்தின்போது நடைபெற்ற கூட்டத்தில் தோழர் ஈ. வே. ராமசாமி தலைமைவகித்தார். சுமார் 2000 ஆடவரும் 500 பெண்டிரும் விஜயம் செய்திருந்தனர். கூட்ட ஆரம்பத்தில் தோழர் ராம. சுப்பிரமணியம் அவர்கள் மணமக்களைப் பொதுஜனங்கட்கு அறிமுகப்படுத்திவிட்டு தோழர் ராமசாமியைத் தலைமை வகிக்கும்படிக் கேட்டுக் கொண்டார். தோழர் ராமசாமி முகவுரையாகச் சில கூற மணமக்கள் உறுதி மொழிகளைக் கூறிக் கொண்டனர். அப்பால் மாலை மோதிரங்களையும் மாற்றிக்கொண்டார்கள். அதுபோது திருச்சி, பொன்மலை ஸ்ரீரங்கமாகிய இடங்களிலுள்ள சுயமரியாதைச் சங்கத்தார்கள் உபசாரப் பத்திரங்கள் வாசித்தளித்தனர். பிறகு பலருடைய சொற்பொழிவுகள் நிகழ்ந்தன.

கடைசியாகத் தலைவர் தம்பதிகளை வாழ்த்துகின்ற முறையில் முடிவுரை கூறினார். அதில் விதவைகள் வயதாகிவிட்டதென்று வருத்தப்படவேண்டாமென்றும் தனக்கேற்ற விதவை யொன்றகப்பட்டால் தான் மணம் செய்துகொள்ளக் கூடுமென்றும் சொன்னது குறிப்பிடத் தகுந்தது. கூட்டம் இரவு 9 க்கு முடிவுற்றதென்று ஒரு நிருபர் எழுதுகிறார்.



தோழர்கள் சிதம்பரமும் ரங்கம்மாளும்.



## திருநாமம் கேட்டல்

ராய. சோ.

உரிமை ஆக்கியோனுடையது.



நலமார்ந்த நற்பவள வாய்ப்பச்சை நறுங்கிளியே!
அலையாதே! இங்கேவா! அருந்தேனோ டமுதீவேன்!
புலையான மனமதனைப் பொறிசெலுத்தா எந்தலைவன்
கலையாளன் திருநாமம் எனக்கொருகாற் கழறுயே! (க)

கொடிப்பவள வாய்க்கிள்ளாய்! இங்கேவா! கொழுந்தேனும்
வடித்தசுவைத் தீங்கரும்பும் மாங்கனியும் உணத்தருவேன்!
பிடித்தபுகழ்ப் போர்ப்பந்தர் பிறந்தருளும் தவக்கொழுந்தின்
மடுத்தஒளித் திருநாமம் எனக்கொருகால் வழுத்தாயே (உ)

மாமயிலார் வண்கைவளர் மாகதமே! வா!வா!!நீ
காமுறுநல் லுணவனைத்தும் கனிவுடனே தருவேனுன்!
ஏமமுறும் இணையில்லா ஏர்வாடாக் கோவிலுறை
தூய்மையுளான் திருநாமம் எனக்கொருகாற் சொல்லாயே! (ங)

கொஞ்சுமொழி அஞ்சுகமே! இங்கேவா! கொம்புத்தேன்
விஞ்சஅளை தின்கனிகள் வேண்டுமட்டும் ஈந்திடுவேன்!
பஞ்சையர்க்கு வாழ்வளிக்கும் பாரதத்தாய் பெருமகனும்
செஞ்சொல்வலான் திருநாமம் எனக்கொருகாற் செப்பாயே! (ச)

குழலொடுயாழ் அமிழ்தனைந்த கொழுமழலைக் கிளவியர்தம்
அழகொழுகும் அங்கைவளர் அணிதத்தாய்! அருகேவா!
கொழுகொழுத்த அமுதீவேன்! கூர்த்தமதிக் கூர்ஜரத்தான்
பழகுபுகழ்த் திருநாமம் எருக்கொருகாற் பாடாயே! (ரு)

பச்சைநிறப் பைங்கிளியே! பாலொடுதேன் நான்தருவேன்!
இச்சைவழி நாடதனை இயக்குவிக்கும் எம்பெருமான்
துச்சமெனத் திருமுழுதும் துறந்தபெரும் திருவாளன்
அச்சமிலான் திருநாமம் எனக்கொருகால் அருளாயே! (சு)

பேதையெனப் பேதையர்சொல் பெண்மணிகள் பேச்சறியக்
காதலிக்கும் கைக்கிள்ளாய்! கனிதருவேன்! கண்ணேவா!
மாதவத்துப் புத்திரிபாய் மணிவயிறு வாய்த்தபுகழ்
நாதனுயர் திருநாமம் எனக்கொருகால் நவிலாயே! (எ)

பண்டேய்த்த மொழியுடையார் பங்கிலுறை மாகதமே!
விண்டேய்த்த மெல்லமிழ்தம் நான்தருவேன்! உண்டிடலாம்
மண்டேய்த்த பெரும்புகழான் மாதவரும் நாடோறும்
கொண்டேத்தும் திருநாமம் எனக்கொருகால் கொஞ்சாயே! (அ)

பாவையர்தோள் மருவுமிளம் பசுந்தத்தாய் வா!வா!!நீ
மேவிவிளை யாடுதற்கு வேணதெலாம் நான்தருவேன்!
ஆவலுடன் எம்பெருமான் அருளொழுகு திருநாமம்
கூவிடுவாய்! கூவிலுடன் கொன்றிடலாம் தீமையெலாம் (கூ)

ஆய்ந்தசொலார் அஞ்சுகமே! அள்ளியுண வீந்திடுவேன்!
மாந்தருய இவ்வுலகில் வந்துதித்த மதிவல்லான்
சேர்ந்தபுகழ்த் திருநாமம் செகமதிக்கும் மோகனதாஸ்
காந்தியென மொழிந்திடுவாய்! கடலமுதம் ஆர்ந்தசொலால்! (கo)

பாயிரம்

அறுசீர் விருத்தம்.

அறைசகமாயிரத்தெண்ணூற் றைம்பதனோ
டைத்தின்மேல் அடைந்து நின்ற
நிறையாங்கி ரசவாடி நேர்இருபத்
தாறும்நாள் நேயக் காந்தி
பொறையுடையான் திருநாமம் பூங்கிளியை
வினவுதமிழ்ப் பொற்பா வேலூர்ச்
சிறையதனில் செய்தளித்தான் ராய்சொக்க
லிங்கனெனும் சிறுவன் மாதோ.

# சகோதரப் பத்திரிகைகள்

### காந்திஜீயை வாழ்த்துக !

பஞ்சாபில் ஹிஸ்ஸார் ஜில்லாவில் சர்க்கா சுற்றுவதன் மூலம் 6795 பேர்கள் 2038 ரூபாய் சம்பாதித்திருக்கிறார்களென்று தெரிகிறது. பஞ்சம் மலிந்த இந்த நாளையில், விலைவாசிகள் வீழ்ந்து போயிருக்கும் இது காலையில், தலைக்கு நாலே முக்கால் அணா கிடைப்பதென்றால் எவ்வளவு உத்தமம்! தர்மம் வாங்கிக்காலம் தள்ளுவதற்குப் பதிலாக ராட்டுச் சுற்றுவதன் மூலம் பஞ்சாபில் 16 ஜில்லாக்கள் காலந்தள்ளுகின்றன வென்றால் உண்மையில் பாராட்டவேண்டியதே! ராட்டினத்தை உயிர்ப்பித்த காந்தியைப்போற்ற பஞ்சாப் சர்க்கார் கடமைப்பட்டிருக்கின்றார்கள்.

—ஸ்டேட்ஸ்மான்.

### டேல்லியில் மலேக்காய்ச்சலாம் !

இதுவரையினும் இந்திய சர்க்கார் வேனிற்காலத்தில் டில்லியில் தங்கமுடியாதென்பதற்குக் காரணமாகத் தண்ணீர்ப்பஞ்சத்தைக் கூறிவந்தார்கள். சமீப காலங்களில் செய்த முயற்சியால் தண்ணீர்க்குறைபாடு தீர்க்கப்பட்டுவிட்டது. இப்போது அங்கு தண்ணீர் செழிப்பாக இருக்குமென்றே நினைக்கிறோம். அந்த நிலைமையில் சர்க்கார் சிம்லா செல்வதற்கு வேறொரு காரணம் கண்டுபிடித்திருக்கிறார்கள். அது, டில்லியில் மாலேரியா (மலேக்காய்ச்சல்) அதிகமுண்டு என்பதாகும்.

—நாஷனல் கால்.

### இங்கிலாந்துக்கு இன்னும் ஒரு வருடமே

பிரிட்டனுக்கு, தான் ஐரோப்பிய யுத்தத்தில் எந்த நிலைமையிலிருக்கவேண்டுமென்று நிச்சயிக்க இன்னும் ஒரு வருடகாலமே யிருக்கிறது. அரசியல் வாதிகளெல்லாம் மறுத்தாலும், பிரிட்டனும் பிரான்ஸும் சேர்ந்து ஒரு ஐக்கிய உடன்படிக்கைக்கு வழி தேடினாலும் யுத்தம் வரப்போவது உறுதி. அந்தக்காலத்தில் தற்போதைய அரசியல் வாதிகளெல்லாம் யுத்த ஆலோசனைக்காரர்களின் கீழ் வந்து நிற்பார்கள்.

—ஸ்டேட்ஸ்மான்.

### வேள்ளையர் உயர்ந்தவரா ?

வெள்ளைக்காரர்கள் பெருமை பாராட்டிக்கொள்வது பற்றி நாகேந்திரநாத் குப்தா எழுதுவதாவது:—

வெள்ளைக்காரர்கள் வியாபார முறையில் கறுப்பு மனிதர்களோடு மிகவும் நம்பிக்கைக் கேடான ரீதியில் நடந்துகொள்கிறார்கள். மேலும் அவர்கள் பெரிய காமிகள்; என்பதோடு கருப்பு ஜாதிப் பெண்களுடன் அதிகமாகச் சவகாசம் வைத்துக்கொள்கிறார்கள்.

பல கறுப்பு ஜாதியார்கள் தற்போது வெள்ளைக்காரர்களால் ஆளப்படுகின்றார்களென்பது உண்மைதான். அது காலச் சுழற்சியின் பயனேயாகும். எந்த ஜாதியும் தோலின் நிறத்தை ஆதாரமாகக் கொண்டு வேறொரு ஜாதியை ஆளுவதில்லை. அன்றி ஆளும் பெருமையுடைய எவரும் நீடித்து மிருப்பதில்லை. பண்டைக்காலத்தில் பெரும் பெரும் சக்தி வாய்ந்திருந்த அரச குடும்பங்களெல்லாம் வெள்ளைத் தோலுடையதல்ல. அவர்களெல்லாம் வெள்ளையர்களை அடிமைப்படுத்தி ஆண்டிருக்கிறார்கள்.

—மாடர்ன் ரிவ்யூ.

### தேன்னிந்தியாவின் கேடு

தென்னிந்தியா வட இந்தியாவைவிடத் தீண்டாமை யொழிப்பில் பிற்போக்காக இருப்பதற்குக் காரண மென்னவென்று மிஸ்டர் T. R. வெங்கட்ராம சாஸ்திரி எழுதுவதாவது:—

சங்கார், ராமானுஜர், மாத்வர் என்ற மதபோதகர்களின் காலத்தின் பின்பு தென்னிந்தியாவில் பெரிய மத இயக்கங்கள் எதுவும் ஏற்பட்டதில்லை. ஆகையால் தென்னிந்தியர் அறிவு குறைந்தவர்களாகவும், மேலான மனித மனப்பான்மையின் தொடர்பில்லாதவர்களாவுமாகி விட்டார்கள். வட இந்தியாவில் பெரும்பெரும் சீர்திருத்த இயக்கங்கள் தோன்றி மனித சமத்துவத்தைப் பிரசாரம் செய்து கொண்டிருந்த காலையில் தென்னிந்தியா தன் பழைய கொள்கைகளைத் தியானித்துத் தியானித்துத் திருப்தியடைந்துகொண்டு பெருமை பேசித் தனியிருந்து வந்தது. அதில் மலேயாளக்கரையோ மிகவும் தனிப்பட்டுப் பைத்தியக்காரத் தனமாகவே நடந்து கொண்டது.

—கார்டியன்.

### அம்பேத்காரை ஞாபகமில்லை

பொது உத்யோகங்களில் முஸ்லீம்களுக்கும் மற்ற சிறுபான்மை சமுதாயங்கட்கும் போதிய பிரதிநிதித்துவம் கிடைக்கவேண்டு மென்பது பற்றி சர்க்கார் சமீபத்தில் விடுத்திருக்கும் திட்டங்களைப் பற்றிப் "பத்திரிகா" குறிப்பெழுதுவதாவது :—

ஏழைத் தாழ்த்தப்பட்டவர்கள். அவர்களுடைய பிரதிநிதியாகிய டாக்டர் அம்பேத்கார் வட்டமேஜை மகாநாட்டில், சிறுபான்மைக் கட்சியாரோடு சேர்ந்து வாதாடினாலும் அவர்கட்குப் பிரதிநிதித்துவ மில்லை. ஆனால் அவர்களுடைய "தேறிய மாணவர்கள் போட்டிகளில் சேர்ந்தால் வெற்றி பெற முடியாததலால் உத்யோக விஷயங்களில் சலுகை பாராட்டப்படுவார்கள்" என்று சொல்லப்பட்டிருக்கிறது.

போட்டியினால் உத்யோகத்திற்கு ஆள் சேர்க்கப்படும்போது முஸ்லீம்களும் மற்றச் சிறுபான்மை வகுப்பாரும் குறைவான சதமானம் வாங்கினாலும் (அவர்கட்கு அப்போட்டியில் ஜயமடைய முடியாது போவதால்) சலுகை காண்பிக்கப்படுவார்களாம். இதனால் கடைசியாகத் திறமை நிராகரிக்கப்பட்டு விட்டதென்று தெரிகிறது.

### ஸர். உஸ்மான் முன்நிற்கிறார்.

ஆக்டிங் கவர்னரான ஸர். எம். உஸ்மான் அவர்கள் குண்டூர் ஜில்லாவில் ஒரு ரக்ஷண்யசேனை பிரசவ ஆஸ்பத்திரிக்குக் கல் போடுவதற்காகவும் ஒரு பாலம், ரோடு ஆகியவற்றைத் திறப்பதற்காகவும் சென்றபோது ஸ்பெஷல் ரயில் வண்டிக்குச் செலவதிகமாகு மெனக் கருதி ஒரு சலூனிலேயே போனார். இதனைப் பின்பற்றி, ஜனநாயக உணர்ச்சி பெருகி வருகின்ற இதுகாலையில், விசேஷமாகப் பஞ்சம் மலிந்திருக்கு மிது காலையில், எல்லா மாகாணக் கவர்னர்களும்—ஆக்டிங் ஆயினும் ஸ்திரமானவர்களாயினும்—ஸ்பெஷல் வண்டிகளில் செல்லும் வழக்கத்தை விட்டு விடுவதும் நலமாகும். இங்கிலாந்து முதன் மந்திரியும், மன்னர்பிரானின் மற்ற மந்திரிகளும் சாதாரண ரயிலில் செல்வார்களானால் மாகாணக் கவர்னர்கட்கும் மற்ற உத்தியோகஸ்தர்கட்கும் அவ்வாறு செய்வதில் தாழ்வில்லை.

—டிரிபியூன்.






### வள்ளுவனார்.

ராய. சொ.

தமிழ் இலக்கிய ஆசிரியருள்ளே தலைசிறந்தவர் வள்ளுவனார் என்பதில் மாறுபட்ட கருத்தே இல்லை. பண்டைத் தமிழ்ப் புலவருள் இலக்கிய உலகத்தில் எல்லா நாட்டாராலும் இன்று அறியப்பட்டவர் ஆசிரியர் திருவள்ளுவர். "தமிழ்மொழி சிறப்புடையது; தமிழ் மொழி தொன்மை வாய்ந்தது; தமிழ் நாகரிகமான மொழி; அது கருத்தமைந்த நூல்பல பெற்றது." என்பன போன்ற உண்மையை நிலைநாட்டச் சான்றாக நிற்பது வள்ளுவர் நூல் போன்ற இலக்கியங்களேயாகும். ஒரு மொழியின் சிறப்பை உலகறிய எடுத்துரைப்பது அம்மொழியிலுள்ள நூல்களே. தமிழ்மொழி சிறந்தது என்பதைப் பகுத்தறியும் கொள்கை கொண்ட ஆராய்ச்சியுலகம் ஒப்புமாறு எடுத்துரைக்க "எங்கள் மொழி அப்படிச் செய்தது; இப்படிச் செய்துவிட்டது; வானத்தை வில்லாக வளைத்தது; மணலைக் கயிறாகத் திரித்தது; மனிதர்கள் நினைக்கமுடியாத காரியத்தை யெல்லாம் செய்தது." என்று கூறும் பண்டாரப் பாட்டுகள் பயன்படா. மொழியின் சிறப்பை அறிவு உலகம் ஏற்குமாறு செய்யுங் கருவி திருக்குறள் போன்ற நூல்களேயாம்.

திருக்குறள் செய்த வள்ளுவனாரைத் தந்ததால் தமிழ்மொழி உயர்ந்தது என்று சொன்னால் அதனை அறிஞர் மறுக்கு மாறில்லை. எந்த மொழி உயரிய கருத்துக்கள் பொதிந்த இலக்கியங்கள் பல பெற்றிருகின்றதோ அம்மொழி சிறப்புடையது என்பது யாவரும் ஒப்ப முடிந்த உண்மை. அவ்வகையில் நல்லிலக்கியம் பல தமிழ்மொழியில் உள என்பதை அறிஞர் மறுக்கலாற்றார். அவ்வாறு சீரிய இலக்கியம் தந்த புலவர் பெருமக்களுள் தலைசிறந்தவர் வள்ளுவனார் என்பது தமிழ்ப் புலவர் அனைவரும் ஒருங்கே கொண்ட கருத்து.

மற்றைப் புலவர் சம்பந்தப்பட்டவரை மாறுபட்ட கருத்துக்கள் இருக்கலாம், வள்ளுவரைப்பற்றி இரண்டு கருத்து இல்லையெனலாம். அவ்வளவு வரை எல்லோர் உள்ளத்தையும் கொள்ளை கொண்டிருக்கிறார் வள்ளுவனார். வள்ளுவர் குறள் செய்த காலம் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முந்தியதாக இருக்கவேண்டுமென்று ஆராய்ச்சிக்காரர் கருதுகின்றார். வள்ளுவனார் பெருமை கருதி அவரை எல்லோரும் தங்கள் சமயத்தைச் சேர்ந்தவரென்றும் தங்கள் வகுப்பைச் சார்ந்தவரெனவும் சொல்லிக்கொள்கிறார். அவர் பிறப்பு வளர்ப்பு வகுப்பு மதம் முதலியவற்றைத் திட்டமாக அறிவிக்கும் சான்று ஏதும் இருப்பதாகத் தெரியவில்லை.

திருவள்ளுவர் என்று ஒருவர் இருந்தார் என்பதை அறிவிக்கும் கருவி ஒன்றே. அதுதான் திருக்குறள் என்பது. அந்தக் குறள் அதன் ஆசிரியர் வகுப்பு மதம் முதலியவற்றைப் பற்றி ஒன்றுமே கூறவில்லை. குறளாசிரியர் ஒரு தற்சரிதத்தை எழுதிவிட்டுச் சென்றாரில்லை. 'தன் அறம் உலகில் ஓங்கினால் போதும்; தன் சரிதம் எற்றுக்கு' என் அப்பெரியார் கருதினார் போலும்! ஆ! அவர் யாராகவிருந்தால் நமக்கென்ன?

அவர் கூறும் அறத்தை நாம் ஆராய லாமே.

தமிழ் நாட்டில் திருவள்ளுவர் அறத்தை ஆய்ந்து அதன்படி நடக்க முயலுவார் அரியர். அவர் ஜாதி மதம் ஆகிய வற்றை ஆராயப் புகுந்து தங்களோடு எப்படியாவது இணைக்க மிகவும் சிரமப்பட்டு எங்கேனும் சில குறள்களைச் சான்றாக எப்படியேனும் பொருள் கொண்டு இடர்ப்பட்டுழல்கின்றார் சில புலவர்கள். "எண் குணத்தான்" என்று கூறுவதால் வள்ளுவர் சைவர்; சைவக் கடவுளுக்குத்தான் எட்டுக் குணங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன என்று சைவர் சாற்றுகிறார். "எட்டுக் குணங்கள் எங்கள் கடவுளுக்கும் உண்டு" எனச் சமணர் இயம்புகிறார். தவிர 'மலர்மிசை ஏகினான்' எங்கள் கடவுளே என்கின்றார் அவர். "தாமரைக் கண்ணான் உலகு" சிறப்பாகக் கூறப்படுவதால் வள்ளுவனார் வைணவர்என வழுத்துகிறார். வைணவர். "ஆதி பகவன்" என்று முதற் பாட்டில் காணப்படுவதால் வள்ளுவர் ஆதி என்ற புலைச்சிக்கும் பகவன் என்ற பார்ப்பானுக்கும் பிறந்தவர் என்று சிலர் கூறுகின்றார். இப்படிப் பலப் பல. இவற்றை வீணாக விரிப்பதில் ஒரு பயனுமில்லை.

ஆசிரியர் வள்ளுவர் எந்த வகுப்பாராக விருந்தாலென்ன? எச் சமயத்தினரானாலென்? அவர் செய்த குறளே நோக்கத்தக்கது. திருக்குறள் உலகினுள்ள தலை சிறந்த நூல்களுள் ஒன்று. அத்தகைய நூலின் மூலம் தமிழ் மொழியிலிருப்பதால் தமிழ் பெருமை பெறுகிறது என்பதில் ஐயமேயில்லை. ஆசியர் வள்ளுவனார் திருக்குறள் மூலமாக அறம் பொருள் இன்பத்தை அணி அணியாக வகுத்துரைத்திருக்கிறார். வள்ளுவனார் குறுகிய சிறு நெறிச் சென்றுழலாது பெரு நெறிபிடித்து எச்சார்புமின்றி அக் காலத்திற்கேற்ப நேர்மைவழிச் சென்ற புலவர் பெருமான். அவரது கடவுள் வணக்கம் என்னும் குறளின் முதலதிகாரம் ஆராய்ச்சியாளர்க்குப் பெருவிருந்தாகும். குறளாசிரியர் கூறாது விட்டுச் சென்ற பொருள் எதுமில்லையெனப் பலர் கருதுவது மறுக்கமுடியாத உண்மை. அவ்வளவு நிறைந்த பொருள்களை—சுருங்கிய அளவில்—சிறிய பாக்களில் அழகுபடச் சான்றுகளோடு தரும் வள்ளுவனார் ஆற்றல் சாலச் சிறந்தது.

வள்ளுவனார் முந்தையோர் வழியையே பற்றியோடும் சிற்றியல்பினர் அல்லர். தமக்குச் சரியெனப்பட்ட பலப் பல இடங்களில் பண்டையோரை மீறித் தமது புதிய அறத்தைப் புகன்றுசென்றார். அறத்துப் பாலில் எல்லா மதத்தாருடைய நல்ல கொள்கையையும் ஆசிரியர் வள்ளுவனார் எடுத்தாண்டிருக்கிறார். அவரது பொருட்பால் உலகிடையைப் பற்பல முறையினும் தெளிவுபட விளக்குகின்றது. பொருட்பாலிலேயே தமது குறளில் பெரும்பகுதியைச் செலவிட்டிருக்கின்றார். இன்பப் பால் உண்மையில் இன்பப்பாலேயாகும். அதனைப் படித்தறியாது இன்பப்பாலை வெறுக்கும் ஞானிகள் சிலர் காணப்படுகின்றார். அவர் காமத்துப்பால் என்ற பெயரைக் கேட்டவுடன் என்னவோ எண்ணிக் கொள்கின்றார்போல் தெரிகின்றது. அதனைப் படித்துணரும் நுண்ணறிவினர் அங்குதான் நூலாசிரியர் பேராற்றலைக் காண்டர். திருக்குறள் இன்பப்பாலில் காணும் நுணுகிய கருத்துக்களை யாண்டும் காண்டல் அரிது. அத்துணை அருமை கொண்டது அப் பகுதி. மக்கட்குப் பெருஞ்சுவை நல்கும் அதன் மாண்பை மற்றொரு சமயம் ஆராயலாம்.

வள்ளுவர் நூலினும்கூட எல்லாவற்றையும் அப்படியே கடைப்பித்தொழுகவேண்டும் என நான் சொல்ல மாட்டேன். எந்த நூலாசிரியர் கருத்தையும் முற்றும் கொள்ளமுடியாது. கருத்து வேறுபாடு இருக்கத்தான் செய்யும். அவ்வாறே வள்ளுவனாரிலும் மாறுபாடு இருப்பதில் புதுமை ஒன்றுமில்லை. சில பொருளில் கால வேறுபாட்டினால் மாறுபாடு தோன்றலாம்; வளர்ச்சி காரணமாகவும் மாறுபட்ட கருத்து இடம் பெறலாம். மற்ற நூல்களைவிட ஆராய்ச்சியாளர்க்குப் பெரிதும் உடன்பட்ட கருத்துக்கொண்ட நூல் திருக்குறள் என்று செப்பலாம் என்பது என் கருத்து. தமிழ் இலக்கியங்களுள் தலை சிறந்தது திருக்குறள். தமிழ்த்தாயின் முடிமணி வள்ளுவனார் என்று கூறுதல் மிகை யன்று.



சர்தார் வல்லபாய் படேல் சிறையினின்றும் விடுதலையானார். பக்கத்தில் (இரண்டாவதாக) நிற்பவர் 'ஜன்மபூமி' ஆசிரியர் திரு. காகால்பாய்.—S.P.B.



# போர்னியோத் தீவு

## இந்தியரின் பூர்வீகத் தேட்டமே

[போர்னியோ என்ற தீவு கொஞ்சக் காலமாக இந்தியரின் கவனத்தைவிட்டு நீங்கி யிருந்தது; ஆனால் சமீபத்தில் தென்னாப்பிரிக்க சர்க்கார் கமிட்டி இந்தியர்கட்குக் குடியேறும் நாடுகளில் போர்னியோவையும் ஒன்றாகக் குறிப்பிட்டு விட்டபடியால் நாம் அத்தீவைப் பற்றிச் சிறிது தெரிந்துகொள்ள வேண்டியவர்களாக இருக்கிறோம். மிஸ்டர். ஆர். சி. மஜூம்தார் என்பவர் அத் தீவைப்பற்றி இவ்வாறு எழுதுகிறார்.]

போர்னியோ மலாயாதீவக் கூட்டத்தில் ஒன்று. அதற்குப் பேரோ புகழோ கிடையாது. ஜாவா தீவோடு ஒப்பிட்டுப் பார்த்தால் அதனைப்போல் ஏழு எட்டுப் பங்கு பெரிது என்று காணலாம். ஆனால் ஜனத்தொகை 30 லட்சத்திற்கு மேலில்லை. அதில் காடுகள் செறிந்திருக்கின்றன. வரிசை வரிசையாகப் பல மலைகள் வடகிழக்கு மூலையிலிருந்து தென்மேற்கு மூலையை நோக்கி ஓடிக்கொண்டிருக்கின்றன. அம்மலைத் தொடர்களில் மிகவும் பெரிய சிகரம் கினபாலு என்பதாம். அதன் உயரம் 3698 அடி. அங்கு பல ஆறுகள் உண்டு; அவை பெரியவைகளுமாம்; ஆனால் இடையிடையே களிமண் கரைகளால் தடை செய்யப்பட் டிருக்கின்றன. அவற்றில் முக்கியமானவை சாம்பித் காதின்கான், பாரிட்டோ, மஹாகம், பிரூனாயி, ரிஜாங் என்பவைகளாம்.

அங்குள்ள காடுகளில், முதல்தரமான தடிகள் (மரங்கள்) உண்டு. கோந்து, அரக்கு முதலியவை ஏராளம். சவ்வரிசிப் பனைகள் அங்குள்ள மலிந்த பொருட்களில் ஒன்றும். மண் மிகவும் நயமானது; ஆதலால் எத்தகைய பயிர்களும் நன்கு வளரும். அடி மண்ணில் பற்பல தாதுப் பொருட்கள் உண்டு. வைரம், தங்கம், வெள்ளி, செம்பு, துத்தநாகம், பிளாட்டினம், ரசம், வீரம், நிலக்கரி, பெட்ரோலியம் எடுக்கலாம். ஆனால் டையாக்குகள் என்கின்ற(சற்று திருந்திய)காட்டு மனிதர்களினிடையே கைத்தொழிலாவது விவசாயமாவது நடப்பதில்லை. இந்தக் காட்டு மிராண்டிகள்தாம் அங்குள்ள ஜனத்தொகையில் பெரும்பான்மையோர். இவர்களில் ஒரு பகுதியார் (மைனாரிடி) டையாக் ஆற்றோரத்தில் வசிக்கிறார்கள். இவர்கள் கொஞ்சம் நாகரிகம் பெற்றிருக்கிறார்கள்; புதிதாகச் சென்றவர்களை ஆதரிக்கவும் செய்வார்கள்.

### இரட்டையாட்சி

போர்னியோ தற்போது முக்காற் பாகம் ஆங்கிலேயருக்கும் காற்பாகம் டச்சுக்காரர்கட்கும் சொந்தமா யிருக்கிறது. ஆங்கிலேயரின் பகுதி காணப்படுவது வடபாலும் மேற்கிலுமாம். இப்பகுதிகளில் பிரிட்டிஷ் வடபோர்னியோக் கம்பெனி,பிருனாயி சுல்தான், ஜேம்ஸ் புரூக் குடும்பத்தார் ஆகியோர் ஆள்கின்றனர். இவர்கள் பிரிட்டிஷாருக்குக் கீழ்பட்டவர்களானாலும் உள்நாட்டு ஆட்சியைப் பொறுத்த வரையிலும் சுதந்திர முடையவர்களாம்.

### ஹிந்துக்கள் உறவு

இந்தத் தீவோடு இந்துக்கள் சம்பந்தம் ஒரு காலத்தில் ஏற்பட்டிருந்தது. அதனை நிரூபிக்கும் சில பொருட்கள் 1879-ம் வருடத்தில் மூவாரகாமா என்ற இடத்தில் கண்டு பிடிக்கப் பட்டன. அப்பொருட்களில் ஒன்று ஒரு பொன் விஷ்ணு விக்ரகம். இரண்டு ஒரு மனிதனின் உயரத்தில் கண்டு பிடிக்கப்பட்ட கற்கம்பங்கள். அவற்றின் தலை உருண்டிருந்ததால் முதலில் சிவலிங்கமென்று கருதப்பட்டது. ஆனால் பிற்பால் அவற்றி லெழுதப்பட்டிருக்கும் வாக்கியங்களைப் பார்த்ததும் அவை வேள்வித் தூண்களென்று கண்டு கொள்ளப்பட்டன. அதிலடங்கி யிருக்கும் வாக்கியங்கள் வருமாறு:—

(1) மூலவர்ம அரசன் பல நற்கருமங்கள் செய்திருக்கிறார். அறிவு வளர்ச்சி உயிர்ப்பிச்சை, பூதானம், கற்பக மரம் முதலியவற்றை வழங்கி யிருக்கிறார். ஆதலால் பிராமணர்கள் இந்தக் கம்பத்தை நிறுவி யிருக்கிறார்கள்.

(2) குண்டங்க அரசனுக்கு அஸ்வவர்மன் என்று ஒரு புதல்வனுண்டு. அவர் அம்சுமானை (சூரியனை)ப்போல ஓர் பரம்பரையை ஆரம்பித்தார். அஸ்வவர்மனின் 3 புதல்வர்களில் மூத்தவர் தான் ஸ்ரீ மூலவர்ம ராஜன். அவராலேயே இந்த வேள்விக் கம்பம் நிறுவப் படுகின்றது.

(3) மூலவர்ம ராஜன் வப்ரகேஸ்வரத்தில் பிராமணர்கட்கு 20 ஆயிரம் பசுக்களைத் தானம் செய்தார். அதுபற்றி இங்கு வந்திருக்கும் பிராமணர்கள் இந்தக் கம்பத்தை நிறுவுகின்றனர்.

(4) சகரனிடத்தி லிருந்து பகீரதன் தோன்றியவாறு..........,.....(பிற்பகுதி தெரியவில்லை.)

### பிராமண மதம்

கல்வெட்டுப் பரிசோதனையால் இக் கம்பங்கள் கி. பி. 400-ம் வருடத்தில் நிறுவப்பட்டிருக்க வேண்டுமென்று சொல்கிறார்கள். ஆகவே கி. பி. 400-ம் வருட வாக்கில் போர்னியோவில் இந்துக்கள் குடியேற்ற நாட்டை ஸ்தாபித்தார்களென்றும் பிராமண மதம் நிலைநாட்டப் பட்டதென்றும் யூகிக்கலாம்.

மூலவர்மன் என்பவர் சரித்திர சம்பந்தமான ஒரு அரசன். மற்ற இருவரையும்பற்றித் தெரிவதற்கில்லை. குண்டங்கன் அஸ்வ வர்மன் ஆகிய இருபெயர்கள் கூடவும் வடமொழியல்ல. ஆகவே கிரோம் என்ற சரித்திராசிரியர் கௌண்டின்யா, அஸ்வத்தாமா என்ற பெயர்களே மருவி மேற்குறிப்பிட்ட உருவம் அடைந்திருக்க வேண்டுமென்றும், காம்போஜ (கம்போடிய) தேசத்தை நிறுவிய அரசர்கள் கௌண்டின்யா, அஸ்வத்தாமா வென்பவர்களாகையினால் அவர்களைத்தான் இப்பிரஸ்தாபக் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றனவென்றும் அபிப்பிராயப்படுகிறார்.

காம்போஜ தேசத்தில் சம்பாவென்ற விடத்தில் கி. பி. 657 என்ற வருடமிட்டிருக்கும் ஒரு கல் வெட்டு இவ்வாறு கூறுகிறது:—

பிராமண சிரேஷ்டராகிய துரோண புதல்வர் என்னும் அஸ்வத்தாமனிடமிருந்து வாங்கிய வேலாயுதத்தை, உத்தமப் பிராமணனாகிய கௌண்டின்யன் இங்குதான் நாட்டினார்.

இந்தக் குண்டங்க அஸ்வவர்மாவென்ற பெயர்களைப்பற்றிப் பற்பல விதமான

வாதங்கள் கிளப்பப்படுகின்றன. அவற்றில் நாம் தலையிட வேண்டாம்.

(போர்னியோவில்) இந்து சம்பந்த முண்டென்று நிரூபிக்கப் போதிய லட்சியங்களில் சில கீழ்போர்னியோவிலும் காணப்படுகின்றன. அங்கு கோம்பெங் என்ற ஓர் குகை இருக்கிறது. அதில் இரு அறைகள் உள. அவ்வறைகளில் ஒன்றில் சில விக்ரகங்களும் இரும்பு, மரமாகியவற்ருலான தூண் முதலியவைகளும் காணப்பட்டன. விக்ரகங்கள் கணபதி, மஹா காலன், நந்தி, விஷ்ணு, பிரம்மா, ஸ்கந்தன் ஆகியவைகளாம். இவற்றின் பீடத்தில் இரும்பு ஆணிகள் காணப்படுவதால் எங்கிருந்தோ இவற்றை இந்தக் குகைக்குக் கொண்டு வந்தார்கள் என்று தெரிகிறது. அது எப்படியாஞலும் அக்காலத்தில் அங்கு பரந்திருந்த மதம் ஹிந்து மதம் என்பதற்குச் சந்தேகமில்லை?

இந்த விக்ரகங்களை நன்ருகப் பரிசோதித்தால் இந்தோ—ஜாவாச் சிற்பத்தின் பகுதியல்ல வென்றும் இந்தியாவிலிருந்தே போர்னியோவுக்கு நேராகக் கொண்டு போகப்பட்டவை யென்றும் சொல்லக்கூடும்.

மஹாகம் நதி போர்னியோவிலுள்ள ஒரு முக்கியமான ஆறு. அதனைச் சமீபித்துத்தான் கொம்பெங் குகை யிருக்கிறது. எனவே ஹிந்துக்கள் நாகரிகம் போர்னியோவில் பரவுவதற்கு அந்நதி பெரிதும் உதவலாமென்று கருதக் கூடும். இதேமாதிரி காபவுஸ் என்ற நதியும் ஹிந்துக் குடியேற்றத்திற்கு உதவி செய்திருக்கலாம். இந்நதிக்கரையிலும் இந்து மதச் சின்னங்கள் ஏராளமாகக் காணப்படுகின்றன. இங்குள்ள தொன்மைப் பொருட்களில் முக்கியமாக அடியில் வருபவற்றைக் குறிப்பிடலாம்:—

(1) சங்கெள என்ற ஆற்றின் அடியில் ஒரு கல் வெட்டிருக்கிறது. அதனை இதுகாறும் படித்தறியவில்லை?

(2) தெரிக் நதியின் கரையில் பத்துப் பஹாட் என்ற விடத்தில் ஓர் கல்லில் ஒரு தடியும் அதன்மீது பல குடைகளும் வரையப்பட்டிருக்கின்றன. இதனை ஒரு ஸ்தூபியின் படமென்று நினைக்கின்றனர். பெரும் பான்மையும் இது பௌத்த மத சின்னமா யிருக்கவேண்டும்.

(3) சுங்கை சம்பித் என்ற நதியோரத்தில் ஒரு குடம் கண்டெடுக்கப்பட்டது. அதில் ஏராளமான தங்கத் தகடுகளில் பழையகால லிபிகளில் ஏதேதோ எழுதப்பட்டிருக்கிறது.

இத்யாதி காரணங்களால் கிருஸ்து பிறப்பதற்கு முன்பு போர்னியோத் தீவில் இந்து நாகரிகம் பரப்பப்பட்டு இந்துக்கள் குடியேறி இருந்தார்களென்று தெரிகிறது.

# ஆதி இந்தியாவில் எழுதும் வழக்கம்

## எப்போது? எப்படி ஏற்பட்டது?

### ஓர் ஆராய்ச்சி

[அண்ணமலைப் பல்கலைக் கழகத்திலிருக்கும் பண்டிதர் M. O. தாமஸ் அவர்கள் எழுதியிருப்பதின் தமிழ் மொழிபெயர்ப்பு.]

#### எழுத்தில்லாக் காலம்

பழைய கால இந்தியாவில் புத்தகாலயங்கள் இருந்ததாகச் சொல்வதற்கில்லை. ஆதிகாலத்து வேத முனிவர்கள் தம் பாசுரங்களை இயற்றி எத்தனையோ வருடங்கள் ஆன பிறகுதான் அவை எழுத்தளவில் வந்தன. அம் முனிவர்கள் செய்யுட்களை அமைத்த போது ஒரு காலத்தில் அவை எழுதப்பட்டு ஜனங்களிடையே உலாவும் என்று நினைப்பளவாவது நினைக்கவில்லை. அக்காலத்துப் போதனை முழுதும் கர்ண பரம்பரைதான். தந்தையோ அல்லது குருவோ தம் புதல்வனுக்கு அல்லது சீடனுக்குப் போதனை செய்யும்போது மனதில் நன்ருக அழுந்தும்படி ஒன்றையே பன்முறை சொல்வார்கள். இங்ஙனமே பல நூற்ருண்டுகளாகப் படிப்பு வந்துகொண்டிருந்தது. இப்படிப்பு முறை வேதகாலத்தில் மட்டிலுமல்ல; பிந்திய காலத்திலும் கூடக் கையாளப்பட்டதாகவும் இதிகாசங்கள், நீதி நூற்கள், வேதாந்த நூற்கள் ஆகியவையும்கூட அம்முறை பற்றியே பல வருடங்கள் பயின்று வரப்பட்டதாகவும் சொல்ல விடமிருக்கிறது. ஆகவே நமது படிப்பு முறையில் முந்திய பகுதியை எழுத்தில்லாக் காலம் என்று பெயரிடலாம்.

#### எழுத்தேற்பட்ட காலம்

எழுத்தேற்பட்ட காலம் இந்தியாவில் எது என்று திட்டமாக எவராலும் கூறிவிட முடியாது. ஆனல் ஒருவாறு கிறிஸ்துவுக்கு முன்பு 8-வது அல்லது 9-வது நூற்ருண்டின் மேலாக இருந்துவிட முடியாது என்று சொல்லலாம். வசிஷ்ட தர்ம சாஸ்திரம் என்ற நூலிலிருந்து வேத கால இறுதியில் எழுத்து முறை பரவி யிருந்தது என்று யூகிக்க விடமிருக்கிறது. அதில் அட்சரம், காண்டம் போன்ற பல சொற்கள் காணப்படுகின்றன. ஆனல் அவ்வெழுத்து முறை எந்த அளவுக்குப் பரந்திருந்தது என்பதைக் கூறிவிட முடியாது. பாணினி மகரிஷி எழுதிய வியாகரணத்தில் (இலக்கணத்தில்) "லிபிகாம்" என்ற வார்த்தை அடிக்கடி வருகின்றது. அதிலிருந்து எழுத்து முறை அக்காலத்தில் வியாபகம் பெற்றிருந்தது என்று யூகிக்கலாம்.

அடுத்தபடியாக திரிபீடகம் என்ற நூலிலும் இதற்கான லட்சியங்களைப் பார்க்கிருேம். பௌத்த உபதேசங்கள் இயற்றப்பட்டபோது எழுத்து முறையைப் பற்றிப் பலவிடங்களில் குறிப்பிடப்பட்டன. இரண்டு நூல்களில் "லேகனம், லேககர்" என்ற பதங்கள் ஏராளமாக உண்டு. லேகனம் என்ருல் எழுத்து என்பது பொருள். லேககர் என்ருல் எழுதுபவர் என்பது பொருள்.

இன்னும் பௌத்த மத நூலாகிய ஜாதகங்கள், உத்யோகஸ்தர் உபயோகிக்கும் எழுத்து, தனி மனிதர்கள் கையாளும் எழுத்து என்று இருவகை லிபிகளையும் பலகையில் எழுதும் வழக்கத்தையும் குறிப்பிடுகின்றன. அன்றி அரசர்கள் விடுக்கும் விளம்பரங்கள் பல, பலகைகளில் எழுதப்பட்டதாகவும் சொல்கிறது. மகாவாகன் பள்



ளிக்கூடப் பாடங்களில் எழுத்து முறையொன்றெனச் சொல்கிருர். இவற்றையெல்லாம் பார்க்கும்போது பௌத்தர்களின் காலத்தில் எழுத்து முறை சுமாராகப் பரந்திருந்தது என்று நிச்சயிக்கலாம். ஆகவே அக்காலத்தில் பழக்கத்திலிருந்த நூல்களெல்லாம் எழுத்தளவில் கொண்டு வரப்பட்டன என்பதற்கில்லை.

#### எழுத்தின் வரலாறு

எழுத்து ஆதிகாலத்தில் கல்வி போதனைக்காக ஏற்பட்டதாய்த் தெரியவில்லை. கி. மு. 8-வது 9-வது நூற்ருண்டுகளில் மலையாளக் கரையோரங்களிலுள்ள வணிகர்கள் மத்தியதரைக் கடலோரங்களில் செழிப்புற்றிருந்த "பொனீஷியன்ஸ்" என்ற ஜாதியாரோடு வியாபாரம் செய்து கொண்டிருந்தார்கள். அராபியர்களோடும் வியாபார சம்பந்தம் வைத்திருந்ததாகத் தெரிகிறது. அதுபோது தம் தொழிலுக்குதவுமாறே அவர்களிடமிருந்து இவ்வணிகர்கள் எழுத்து முறையைக் கற்றுக் கொண்டிருக்கலாம். பின்னுடி அதிலேற்பட்டிருக்கும் (எழுத்து முறையில் ஏற்பட்டிருக்கும்) சௌகரியத்தை யுணர்ந்து அரசர்கள் பின்பற்றலானுர்கள். அவர்களின் விளம்பரங்கள், சர்க்கார் உத்தரவுகள் எல்லாம் எழுத்தாகவே யிருந்தன. இதனைப் பார்த்ததும் புலவர்களும், பண்டிதர்களும் பிறரும் கல்வி போதனைக்கும் எழுத்து முறை ஏற்றது என்று அதனைச் சொந்தமாக்கினர். என்ருலும் அதுகாலை எழுதும் கருவிகள் தற்போது காண்பது போலச் சுலபமாகவும் சௌகரியமாகவும் ஏராளமாகவுமில்லாததால் சில சில பகுதிகள் மட்டிலுமே கஷ்டப்பட்டு எழுதப்பட்டன. அக்காலங்களில் எழுதும் காகிதங்களா யிருந்தவை பாறை, கல், மரம் மூங்கில் முதலியவைகளாம். இவற்றில் வேதங்கள், இதிகாசங்கள், உபநிஷத வியாக்யானங்கள் முதலியவற்றை எழுதி முடிப்பது சாத்தியமா? இல்லை யன்ருே; ஆகவே சிறு சிறு குறிப்புக்கள், விளம்பரங்கள் முதலியவையே சாதாரணமாய் எழுதப்பட்டன. அசோக மகாராஜனுக்குத் தம் பௌத்தமதக் கோட்பாடுகளை வெகுவாக எழுத முடிந்தது.

#### பூர்வீக முறை

எழுத்து முறை நமது தேசத்தில் அதிகமாகப் பரவத் தொடங்கிய பின்னரும், பண்டிதர்களும் முனிவர்களும் தம் அறிவைத் தலையிலேயே (மூளையிலேயே) வைத்துக் கொண்டார்கள். கர்ண பரம்பரையாய் அறிவு படர்வதே சிறந்த தென்று கருதினர். பாறையில், பலகையில் எழுதிப் படிப்பதை விட மனதில் எழுதிக்கொள்வது மேலான தென்பது அவர்களது எண்ணம். ஆதலால் ஞர்பக சக்தியை அதிகமாகப்பெற்றிருந்தனர். அக்காரணம் பற்றிப்பழைய நூல்களில் ஏராளமானவை எழுதப் படாமலே போயின.

#### பனையோலை

இதுகாறும் எழுத்து ஏற்படாத காலம், எழுத்தேற்பட்டுக் கொஞ்சம் பிரசாரத்திலிருந்த காலம் என்று இரண்டைப்பற்றிக் கூறினேம். மூன்ருவதாக பனையோலை உபயோகத்திலிருந்த காலத்தைப் பார்க்கிருேம். பனைமடல் இது வரையிலும் உபயோகிக்கப் பட்டு வந்த எழுதும் கருவிகளில் மேலானதாகும். அது மென்மையானதும் வளைவதும் கூரிய ஏதேனும் பொருட்களைக் கொண்டெழுதினல் நன்ருக எழுத்து ஓடக் கூடியதுமாம். அதில் எழுதப்பட்ட எழுத்துக்கள் மாய்ந்து போவதில்லை; ஏடுகளைப் பாது காப்பதும் சுலபம். ஓரிடத்திலிருந்து மற்ருேரிடத்திற்குக் கொண்டு போவதும் கஷ்டமானதல்ல. அதற்காகும் செலவும் சொற்பமே. இத்தியாதி காரணங்களால் காகிதம் நம் நாட்டுக்கு வந்தது வரையிலும் பனை ஓலையே ஏராளமாக உபயோகிக்கப்பட்டு வந்தது. இன்று கூடவும் நாட்டில் பற்பல பாகங்களில் ஏராளமாகப் பனையோலை உபயோகப்படுத்தப் படுகிறது.

இந்த ஓலை எப்போது உபயோகத்துக்குக் கொண்டு வரப்பட்டதென்பது நன்ருகத் தெரிய வில்லை. எனினும் அசோகர் காலத்தின் பிந்தியல்ல வென்பதைத் திட்டமாகக் கூறலாம். அசோகர் காலத்தில் ஏராளமாக நூற்களும் கடிதங்களும் எழுதப்பட்டு வந்ததாகத் தெரிகிறது. அன்றி அசோகரின் கடிதங்கள் இலங்கை அரசனுன தேவன் நம்பிய தீசா என்பவருக்கும் நாட்டில் பல பாகங்களிலும் இருந்து வந்த சிற்றரசர்கட்கும் பிரபுக்களுக்கும் அனுப்பப்பட்டதாகவும் சொல்லப்படுகிறது. இத்தனையும் பெரிய பெரிய பாறைகளிலும் தூண்களிலும் எழுதப்பட்டுச் சுமந்து செல்லப்பட்டன வென்ருல் பொருந்துமா? பெரும் பான்மையும் பனையோலையோ மரமட்டைகளோ தான் உபயோகப்படுத்தப்பட்டிருக்க வேண்டும் ஆனல் நிர்ப்பாக்கியவசமாக அப்பொருட்கள் தேய்வுக்கும் அழிவுக்கும் இலக்கானவைகளாதலால் ஓரளவுக்கு சாஸ்வதமான கற்களைப்போல இன்று நம் கைகட்குக் கிடைக்க வில்லை.

அனுமானங்களால் கி. மு. மூன்ருது நூற்ருண்டில் ஏராளமாக எழுதும் வழக்கமிருந்தது என்று யூகிக்கலாம். அக் காலத்தில் இலக்கியங்களில் எழுதும் மையைப் பற்றிப் பல விடங்களில் சொல்லப்பட்டிருப்பதைப் பார்க்கிருேம். மையென்ற அளவிலே கல்லிலோ பாறையிலோ எழுதப்பட வில்லை என்பது தேற்றம்.

#### அதிகமான இலக்கியங்கள்

ஈண்டு எழுத்துமுறை நமது இலக்கியங்களையும் கல்வியையும் எந்த வழியில் பாதித்தது என்று பார்ப்போம். எழுத்தேற்பட்ட காலத்திலேயே இருந்த இலக்கியங்களை யெல்லாம் எழுத்து அளவில் கொண்டுவந்துவிட முயற்சிசெய்யப்பட்டது. அத்தகைய முயற்சி பெரும் பான்மையும் கிருஸ்துவுக்கு முந்திய நூற்ருண்டுகளில் செய்யப்பட்டிருக்க வேண்டும். அறிஞர்கள் சற்றேறக் குறைய கிருஸ்துபிறந்த காலத்தில் உபநிஷதம், இதிகாசம், வேதம் முதலியவை, (வண்டிக்கணக்கான ஏடுகள் தேவைப்பட்டிருந் திருக்கும்; ஆனுலும்) ஓலைகளில் எழுதியமைக்கப் பட்டன வென்கின்றனர். அதேபோல புத்த மத இலக்கியங்களும் கி. பி. ஐந்தாவது நூற்ருண்டளவில் ஓலையில் எழுதப்பட்டிருக்க வேண்டுமென்று யூகிக்கின்றனர். கி. பி. நான்காவது நூற்ருண்டு முதல் ஏழாவது நூற்ருண்டுவரையிலுமுள்ள காலங்களில் இந்தியாவுக்கு வந்து தங்கியிருந்த சீனயாத்ரீகரான பாஹியான், ஹீயுன்சாங் என்பவர்கள் ஏராளமான நூல்களைப் பார்த்ததாகவும் தம் சொந்தநாட்டுக்கே ஏராளமாகக் கொண்டு போனதாகவும் சொல்கிருர்கள். இதிலிருந்து சீனுவுக்குக் கொண்டு போகும்படியான அளவில் ஏடுகளிருந்தன வென்று நினைக்கலாமல்லவா? மேலும் கி. மு. 5-வது நூற்ருண்டு முதல் கி. பி. 11-வது நூற்ருண்டுவரையிலுமுள்ள 1600 வருஷங்களாய் கபிலவாஸ்து, ராஜகிருஹம், பாடலீபுத்ரம், காசி, உஜ்ஜைனி, தக்ஷசிலா, நலந்தா, ஆகிய விடங்களில் செழித்திருந்த பல்கலைக்கழகங்களில் கணக்கற்ற நூல்கள் குவிந்திருந்தன வென்று படிக்கிருேம்.




## கிழவனின் காதல்.

(இ. சிவம்)

திருநெல்வேலி,
கணபதிபுரம்.

வரதராஜனுக்கு,

உன் செயல்கள் ஊர் முழுதும் பெரும் அபக்யாதியைக் கொடுத்திருப்பதோடு என் குலப்பெருமைக்கு மாபெரும் கேடரியாகி யிருக்கின்றது. குலத்திற்குக் கெடுதி செய்யும் ஒருவன் என் புதல்வனு யிருக்கவேண்டாம். எந்தச் சுற்றத்தானுயினும் என் குடும்பத்திற்குத் துரோகம் செய்வானுயின் அவன் என் விரோதியே என்பதை நீ நன்கறிவாய். ஆதலால் நீ மதுரையிலிருந்து அழைத்து வந்திருக்கும் சரோஜா வென்ற பெண்ணை நாளை 10 மணிக்குள் அனுப்பிவிடு. உனக்கு வேறு பெண் பார்த்து இன்னும் ஒரு வாரத்திற்குள் கல்யாணம் செய்து வைத்து விடுகிறேன். கல்யாண சுந்தரம் பிள்ளை தன் புதல்வியான கமலாட்சியை எந்த நிமிஷத்திலும் தர ஆயத்தமா யிருக்கிருர். நீ இணங்கினல் எப்பொழுதாயினும் திருமணத்தை நிகழ்த்தலாம். கமலாட்சி நல்ல அழகும் இளமையும் நற்குணங்களும் நம் வீட்டை நாடவேண்டுமென்ற விழைவும், கல்வியறிவும் கொண்டிருப்பவள். இப்படிப்பட்ட சம்பந்தம் வேண்டாமென்றிருக்குமானல்—சரோஜாவையே நீ ஒன்றி வாழ விரும்பினல்—நாளை 10 மணிக்குமேல் என் புதல்வனல்ல; நீ. மேலும் என் வீடு குடிகளையும், சொத்து பத்துகளையும், நகை நட்டுகளையும் விட்டு விடவும் வேண்டும். இன்று என் ஆஸ்தி என்று ஜில்லா முழுதும் சொல்லப்படுகின்ற ஏழு லட்சமும் என்னல் சம்பாதிக்கப்பட்டவை என்பதை ஞாபகப் படுத்துகிறேன். அவற்றை நானுக நயந்து உனக்குத் தந்தால்தான் உனக்குப் பாத்தியமுண்டே தவிர மற்ற வழிகளில் எப்படியும் உனக்கு உரிமையுடையனவாகா.

நான் இக்கடிதத்தில் எழுதுவது முழுதும் நன்கு யோசித்து முடிவுசெய்யப்பட்டவை. சரோஜாவை விட்டு நம் குலத்தில் ஓர் பெண்ணை மணந்து கொள்ளவேண்டும்; அதுவே என் கட்டளை.

காமாட்சிநாத பிள்ளை.

* * *

காமாட்சிநாத பிள்ளை திருநெல்வேலி பேலஸ் தெருவிலுள்ள ஒரு பிரபலஸ்தர். அவருக்குக் குற்ருலம், பாவநாசம், திருநெல்வேலி, பாளையம்கோட்டை, திருச்செந்தூர், நாங்குநேரி முதலிய விடங்களில் பங்களாக்களும் நிலபுலன்களுமுண்டு. சுமார் ஏழு லட்சத்திற்கு ஆஸ்தி இருக்குமென்று ஊரார் கணக்கிட்டனர். இவ்வளவு திரண்ட ஆஸ்தியையும் அனுபவிக்கத் தந்தை தனயன் ஆகிய இருவரையும் தவிர வேறு யாருமில்லை. காமாட்சிநாத பிள்ளையின் 55-வது வயதில் மனைவி மங்களம் இறந்து போனுள். அதன் பின்னர் தந்தை தனயன் மீதும் தனயன் தந்தை மீதும் காண்பித்து வந்த அன்பிற்கு அளவில்லை. ஆனல் இப்போது பாழாய்ப் போன ஜாதிபேத மெனும் பைசாச உணர்ச்சியால் இருவரும் போராடத் தொடங்கி யிருக்கின்றனர்.

* * *

காமாட்சிநாதபிள்ளைசொத்துச் சம்பாதித்ததைப் பற்றி யொரு கதை சொல்லப்படுகிறது. அவர் 20 வயதுப் பிராயமாயிருக்கும் போது பெற்ருேர் இறந்து போனுர்களாம். இறக்கையில் அவர்களிடம் ஒரு சல்லிகூட ஆஸ்தியிருக்கவில்லை. ஆதலால் காமாட்சி பட்டினியும் பசியுமாயிருந்து ஒரு காலியாகக் காலம் தள்ளினுன். சிறிது நாள் பொறுத்ததும் யாரோ நண்பர்கள் உபதேசிக்க மூட்டை தூக்கி மஞ்சள் விற்கலானுன். சுமார் 25 வயது வரையிலும் அவ்வியாபாரம் நடைபெற்றது. 26 வயது வந்தபோது ஒரு நாள் மாலையில் மஞ்சள் மூட்டையோடு மேலப்பாளையம் ரோடில் சென்று கொண்டிருக்கையில் காட்டில், ஜனச்சந்தடி இல்லாத ஓரிடத்தில், ஒரு வேலியோரத்தில், தனியாக ஒருவன் உருண்டு புரண்டு கத்துவது தெரிந்தது. உடன் காமாட்சி ஆச்சரிய முற்றுப் பக்கத்தில் சென்ருன். அங்கு சில அழுக்கடைந்த துணிகளும் ஒருஆழமான குழியும் தென்பட்டன. எனவே வியந்து காமாட்சி அருகில் செல்ல,புரண்டவன் ‘நானிதோ, இறக்கிறேன்; இறந்ததும் துணியிலிருக்கும் 1000 பவுனையும் எடுத்துக்கொள். என்னைக் குழியில் புதைத்துவிடு. நீ பாக்கிய சாலி. தகுந்த தருணத்தில் வந்து விட்டாய்’ என்ருன். காமாட்சி அதிகமாக வியந்து, வாய் பிளக்க, புரண்டவனும் வாய் பிளந்தான். (அவன் ஓர் வடநாட்டுப் பார்ப்பான்) உடன் காமாட்சி பவுனை எடுத்துக்கொண்டு பிணத்தைக் குழியில் தள்ளி மூடிவிட்டு வந்து விட்டான். இந்தப் பணம்தான் வளர்ந்து வளர்ந்து லட்சமாயிற்று.

காமாட்சி ‘பவுனுடன் வந்ததும் நெடு நாள் வெளியே சொல்ல வில்லை. ஏதோ 200 ரூபாய் சம்பாதித்து விட்டதாகக் கூறி ஒரு சிறிய குச்சிலை வாங்கினுன். மூன்று மாதத்திற்குப் பிறகு 100 ரூ. வெளியே காண்பித்து மங்களம் என்ற ஒரு பெண்ணை மணந்தான். அதிலிருந்து நூறு,மூன்னூறு ஐந்நூருக எடுத்து எடுத்துக் கடைசியில் ஒரு கடைக்குச் சொந்தக்காரனுகி, அதிலிருந்து முதலாளியாகி நாளடைவில் திருநெல்வேலியில் கனம் காமாட்சிநாதபிள்ளையானுர். பணம் வந்தால் எல்லாம் வந்துவிடு மல்லவா? அவருக்கு உடல் பருத்தது; வைதீகம் தலையெடுத்தது; செல்வாக்குடன் சுற்றத்தார் பெருகினர். மங்களமும் பெரும் கிளைகளுடையவரானுர். சுருக்கத்தில் திருநெல்வேலியில் ஒரு குபேரன் போலாகி விட்டார், திருவாளர் காமாட்சிநாதர் அவர்கள். இந்த நிலைமையானதும் ஆசார அனுஷ்டானங்களும் பலஊர்களில் பங்களாக்களும் நிலபுலன்களும் வந்தன.........................அப்படியிருக்க மங்களம் காமாக்ஷிநாதரின் 50 வது வயதில் இறந்து விட்டார்..........
உடனே காமாட்சிநாதர் பங்களா இருந்த விடங்களிலெல்லாம் தாசிகள் வைக்கலானுர். அதன்பயனுகத் திருச்செந்தூர் சண்முகம் (வேளாள வகுப்பு) மணியாச்சி நாகம்மாள் (செட்டி வகுப்பு) குற்ருலம் நடன குஞ்சிதம் (குறத்தி) கடையம் கிருஷ்ணவேணி (நாயுடு வகுப்பு) முதலியோர் வெளிப்படையாகவும் பாவநாசம் பாக்கிய லக்ஷ்மி (பள்ளர் வகுப்பு) இரகசியமாகவும்வைப்பாட்டிகளாயினர். இவர்களைத் தவிர வீட்டிலேயே வேலைக்கிருந்த இராமஐயர் வீட்டிலும் உண்டெனச் சொல்லிக் கொண்டார்கள் ஊரார். இவ்வளவு சகல ஜாதி சமரச மனப்பான்மையுடைய காமாட்சிநாதன்தான் தன் மகன் நாயுடுப் பெண்ணுகிய—அழகின் திருவவதாரம் சரோஜாவை மணக்கலாகா தென்று வேதாந்தம் பேசுகிருர்.

* * *

வரதராஜன் நல்லபுத்திக் கூர்மையுடையவன். பெரிய சீர்திருத்த வாதி. பழமை வைதீகம், சாஸ்திர சம்மத மென்பவையெல்லாம் பிடிக்காது. பிரசங்க மேடையில் ஏற்றி விட்டால் வைதீகத்தைத் தூள் தூளாக நொறுக்கி விடுவான். சங்கராச்சாரியார்மதுரைக்குவந்தபோது அவன் கேட்ட கேள்விகட்குப் பதில் சொல்ல இயலாது “நாஸ்திகர் வாதம்” என்று கூறிவிட்டுப் போய்விட்டார். அவன் பீ. ஏ. வகுப்பில் படித்துக் கொண்டிருந்த காலையில்தான் (மதுரையில்) சரோஜா சினேகமானுள்.

சரோஜா ஓர் மாணவி. அவளது தந்தையார்—லக்ஷ்மண நாயுடு என்பது பெயர்—மதுரை செஷன்ஸ் கோர்ட்டில் நாஜாராக விருந்தார். அவர் தங்கிய வீட்டின் பக்கத்து வீட்டில்தான் தங்கிவந்தான் வரதராஜன். அவனது கவின் நிரம்பிய சரீர அமைப்பைக் கண்டு சரோஜா மிரண்டுவிட்டாள். வரதராஜனும், நாண் மலர் போன்ற வசீகரம், அழகு, இளமை புதுமை, மலர்ச்சி முதலியன பூத்த—ஆடவர் கொட்டாவி விட்டு அல்லும் பகலும் ஆவலுடன் அவாவும் அங்க அமைப்பு அணைந்த அரிவையின் ஆகர்ஷணத்தால் அலைப்புண்டு போனுன். இங்ஙனம் இருவரும் பரஸ்பரம் காதல் கொண்டு, நாணத்தால் கடைக் கண்ணெறிந்து சில மாதங்களானதும்—ஆம்—வரதன் நேரில் பேசிக்கொள்ளும் ஒரு சந்தர்ப்பம் கிடைக்க என்ன வழியென்று



சரோஜா நோக்கியபோது வரதராஜன் மடிமீது அலர்மேலு உட்கார்ந்து கொண்டிருந்தாள்.

யோசிக்கலானுன்—கடைசியில் வெற்றி பெற்றுவிட்டான் அவன்.

ஒரு நாள்—ஒரு சனிக்கிழமை—நண்பகலில் சரோஜாவின் தங்கையான அலர்மேலு 10-வயதுப் பெண்—திடீரெனக் காணப்படவில்லை. அப்போது சரோஜாவின் தாயார் குடும்பக் காரியமாகச் சோழவந்தானுக்குச் சென்றிருந்தார். தந்தை கோர்ட்டுக்குப் போய்விட்டார். ஆதலால் நம் மங்கை கலங்கித் தங்கையை எங்கும் தேடினுள்.

சுமார் 3 மணி நேரம் பலவிடங்களிலும் தேடியும் காணுததால் கவலையுடன் (மாலை மணி 5-க்கு) மேன்மாடியில் ஏறி நின்று தெருக்களில் நோக்க, பக்கத்து வீட்டு மாடியிலிருந்து “அக்கா அக்கா இதோபார்” என்ற சத்தம் வருவது தெரிந்தது. அச்சத்தம் அலர்மேலுவினுடையதா யிருப்பதைக்கண்டு வியப்புற்று சரோஜா திரும்பிப்பார்த்தாள். ஆ! அங்கு அலர்மேலு மடிமீதுட்கார்ந்திருக்க வரதராஜன் அவளைப் பார்த்துக்கொண்டிருந்தான்!!

அந்த வேளையில் அலர்மேலு :—“அக்கா நான் இனி அங்கு வரவேமாட்டேன். இந்த மாமாவோடுதானிருப்பேன். உனக்கு வேண்டுமானுல் அவருடைய உத்தரவைப்பெற்று என்னை அழைத்துக் கொள்”.

என்று சொன்னதோடு தன்னுடன் போகுமாறும் வேண்டினுள். இது வரதராஜன் செய்த தந்திரம்; சாமர்த்தியத்தின் பயன்.

தன் தங்கை கூறும் வார்த்தைகளைக் கேட்டதும் ஆச்சரியமொருபக்கம்; ஆசையொருபக்கம்; நாணமொருபக்கம்; பயிர்ப்பு ஒரு பக்கமாக நின்று அவளை அசைக்க அவள் ஒதுங்கி நின்று “வா அலர்மேலு! அம்மா தேடுகிறுர்கள்” எனவும்,

வரதராஜன் :—(மெதுவாக) நீங்கள் இங்குவந்து அழைத்துப் போங்கள் என்று சொல்லு........அமலி............... என்றுன். அப்படியே கூறிற்று.... குழந்தை.

அதிகமேன்? சிறிது நேரத்திற்குள் அலர்மேலு என்னும் டெலிபோன் கம்பி மூலமாகக் காதலர் இருவரும் மறைமுக வார்த்தைகள் பேசிக் கொண்டார்கள்! ஆ! அந்த வேளையின் இன்பம்! யாருக்குத்தான் கிடைக்கும்! உலகில் வெகு சில காதலர்களே அனுபவித்திருப்பார்கள். அரசர்களும் உளம் வெந்து தவம் புரியத் தகுந்த சரோஜா (நல்ல ரோஜா வென்னலேதகும்) வரதாரஜனேடு இணையும் ஒரு சந்தர்ப்பமென்ருல் ஏன் இன்ப மழை தூவாது!

சரோஜா—ராஜன் காதல் பெருகி சுமார் 3 மாதமானதும் இருவரும் முறையே இண்டர் மீடியெட், பீ. ஏ. ஆகிய பரீட்சைகளில் தேறி நற்சாட்சிப் பத்திரம் பெற்றனர். அப்பால் மணம் செய்வதில் என்னதடை? நாஜர் லக்ஷ்மண நாயுடுவின் சம்மதத்துடன் ராஜன் தம் காதலியைத் திருநெல்வேலிக்கு இட்டுச் சென்றுன். அந்தத் தருணத்தில் தான் மேற்சொன்னவாறு காமாட்சி நாதன் தன் மகனைக் கடியவும் கடிதமெழுதவும் செய்தார்.

* * *

வரதராஜன் தந்தை கடிதத்தைப் பார்த்ததும் குழம்பினுன்; என்றுலும் ஏற்கெனவே எதிர்பார்த்ததாதலால்—சரோஜாவினிடம் அம்பாசமுத்திரம் வக்கீல் தோழர் S.மாணிக்கத்தின் விலாசத்தைக் கொடுத்து சில இரகசியங்களும் கூறி விட்டு வெளியே புறப்பட்டான்.

* * *

“ராமா! கடிதத்தைக் கொடுத்தாயே; அந்தப் பெண்ணைப் பார்த்தாயா? அவளிடம் அந்தப் ‘பயல்’ மிரளும்படியாக என்ன விசேஷம்” என்றுர் காமாட்சி.

ராமன் :—அடடா! என்ன விசேஷமென்று சொல்கிறீர்கள்! என்ன அழகு! என்ன கவர்ச்சி! பெண்ணென்றுலும்.... அடடா!

காமாட்சிநாதன்:—அப்படியா?........

ராமன் :—உங்கள் ஷண்முகம், நாகம்மாள், குஞ்சரமெல்லாம் இவளுக்கு அடிமை வேலை செய்வதற்குக்கூட அருகரல்லர். அடைந்தாலும்...........

இப்படியே கிழவனின் சுருதியை ஏற்றிவிட்டான் ராமன். கிழவன் தாளம் போடத் தொடங்கிவிட்டான். உடன் அதாவது மாலை மணி 6-30 க்கு—தன் பேபி காரை எடுத்துக்கொண்டு பாளையங்கோட்டை சென்றுர். அங்கு சில வேலையாட்களும் சரோஜாவும் தவிர வேறு யாருமில்லை.

பங்களாவை நாடியதும் பெண்ணைப் பார்த்தார்; கண்ணில் மின்னெளி தாக்கியது போன்றிருந்தது; ஆகவே கண்ணும் மனமும்—ஏன் உடம்பு முற்றிலும்—வெறியேறிவிட உடன் வேலைக்காரர்களை அழைத்து “அம்மாவுக்குச் சாப்பாட்டுக்குச் சித்தம் செய்யுங்கள்” என்று கட்டளை பிறப்பித்தார். வேலைக்காரர்கள் பறந்து கிளப்புக்குப் போனுர்கள். பின் ஓர் தனியறையில் ஒரு சோபாவில் உட்கார்ந்து கொண்டு சரோஜாவை அழைத்தார். அவள்—எப்படியாவது மாமாவல்லவா?—வந்து கதவண்டை மறைந்து நின்றுள். அவர்! “நாணுமல் இங்கே நீங்கி நில் அம்மா! உன்னிடம் சில இரகசிய சமாச்சாரங்கள் பேசவேண்டும்” என்றுர்.

சரோஜா சற்று நீங்கி நிலத்தை நோக்கிய வண்ணம்—ஆனுல் கவனித்துக் கொண்டு—நின்றுள். கிழவன் உணர்ச்சி வடிய, வெறி சொட்ட, காதல் பெருக்கொடுக்க, அடியில் வருமாறு புலம்பினுர் :—

‘சரோஜா! நீ நல்ல பெண்ணுகத் தோற்றுகிருய். வரதன் மீதும் அதிகமான அன்பிருக்கலாம்........ஆனுல் அன்பினுல் ஒன்றும் சாதித்து விட முடியாது—ஆஸ்திதான் இன்பம். அப்படியிருக்க நீ அன்பனுக நினைத்தால் அவனுக்கு ஆஸ்தி கிடைக்கும்படி செய்ய வேண்டும்...........நீ ஊரை விட்டுப்புறப்பட்டு வந்து விட்டதால் திரும்பப் போய்விட வேண்டுமென்பதில்லை; இங்கேயே நன்றுகத் தங்கியிருக்கலாம். என்னுடைய திருச்செந்தூர் வீடுகள், குற்றுலத்துப் பங்களாக்கள், நாங்குநேரிக் கட்டிடங்கள், திருநெல்வேலி மாடிகள் எல்லாவற்றையும்கூடக் கட்டி ஆளலாம். அதோடு ராஜனுக்குச் சமமாயிருந்தது போகத் தாய்ஸ்தானத்திலு மிருக்கலாம். அவனுக்கு நீயே இருந்து கமலாட்சியை மணம் செய்து விட்டாயனுல் எவ்வளவு அழகாயிருக்கும்! அப்பொழுது அவன் மீது நீ காண்பிக்கும் அபிமானத்திற்கும் உதாரணமாகாதா? இப்படிச் செய்வதுதான் மிக மிக உத்தம மென்பது என் கருத்து—எதுவும் யோசித்துச் செய்........ஒரு நாள் சாவகாசம் தருகிறேன். எதற்கும் சற்று யூகத்தை நாடு; இல்லையானுல் ராஜனை ஒட்டாண்டியாக விடு; நீயும் திண்டாடு.

‘சற்று யோசிப்பின், உன்போன்ற ஒரு நல்ல பெண் சமயத்திற்குத் தகுந்தபடி நடப்பதில் தயங்கலாகாது.



என் கருத்தை உணர்ந்து நடப்பாய் என நம்புகிறேன். மேலும் ராஜனிடத்தில் உனக்கு அபிமான முண்டென்றுல் அவனுடைய தந்தையாகிய நான் அதனை நுகர வேண்டாமா?’

என வெறிகொண்டு கெஞ்சிக் கெஞ்சிக்கூறவும் கனவிற்கூட இத்தகைய ஆபாசத்தை நினையாத சரோஜா ஆத்திரமும் எரிச்சலும் கொண்டு “நாளையாகட்டும் இதற்குப் பதில்” என்றுள். எப்படி வந்ததோ—கிழவன் மரியாதை—ஒரு காதல் பார்வையும் புன்முறுவலும் பூத்து வெளியேறி விட்டான்.

மறுநாள் காலையில் சரோஜா வேலைக்காரர் மூலம் ஒரு தந்தியை ராஜனுக்கு அனுப்பினுள். அத்தந்தியில் “தந்தைக்கு வெறி—மாலை வருவதாக வாக்குறுதி—உடன் வரவும்” என்றிருந்தது,

அவ்வண்ணமே வரதராஜன் ஏதேதோ சந்தேகத்துடன் வெருண்டு பாளையங்கோட்டைக்கு ஓடி வந்தான். அப்போது இரவு மணி எட்டிருக்கும். பங்களாவில் ஒரு வேலைக்காரர்கூட இல்லை. காமாட்சிநாதன் ஓரறையில் வெறிகொண்டு சரோஜாவைத் தூரத்துகிறுர். சரோஜா உதறித் தள்ளிக் கொண்டு ஓடுகிறுள். இந்த சீனைப் பார்த்தான் ராஜன். தனக்கும் அதில் ஆக்டு செய்யவேண்டும்போல் தோற்றியது. உடன் ஒரு பாய்ச்சல்! கிழவன் வைதீகக் குடுமி இட்டது கையில் சிக்கியது.

வலது கை “தந்தை”யின் அருமைக் கன்னங்களைப் பலமாகத் தடவின. சரோஜா தடைசெய்ய முயன்றுலும் ராஜன் “பிசாசே! இதுவா உன் வைதீகம்; இதுவா உன் ஒழுங்கு; நீயா தந்தை” என்றுகூற, கை ஒவ்வொரு வாக்கியத்திற்கும் தாளம்போடக் கிழவன் உதை தாங்கமாட்டாமலும் அவமானத்தைப் பொறுக்க மாட்டாமலும், “அடே நிறுத்து! சங்கதியைக் கேள்! தந்தையல்லவா நான்? சரோஜா? சும்மாவா இருக்கிருய்? நீ அன்னிய பெண்ணுயிற்றே; எப்படி இருப்பாயோ வென்று பரிசோதிக்க அல்லவா செய்தேன்? அடே ராஜா, சரோஜா, ராஜா, சரோஜா” என்று புலம்பிப் பிரலாபித்தார்.

ராஜன் :—பரிசோதனையா பார்க்கிறீர்? எப்படி யிருக்கிறது பரிசோதனை?

காமாட்சி :—நன்றுக இருக்கிறுள்.

ராஜன் “அப்படியானுல் உமது சொத்தையெல்லாம் எழுதிக்கொடும். நாங்கள் மணம்செய்து வாழ்கிறோம்” என்று ஒரு காகிதத்தை நீட்ட அவர் ஒரு உடன்படிக்கை எழுதிக்கொடுத்தார்.

சுருங்கச் சொன்னுல் காதலர் கலப்பு மணம் செய்து இன்பமாய் வாழ்கின்றனர். திருநெல்வேலிப் பழமை விரும்பிகள் அவர்கள் போவதையும் வருவதையும் பார்த்துப் பெருமூச்சுவிடுகின்றனர். கிழவன் தலை பிழைத்தது தம்பிரான் பாக்கியமென்று குற்றுலத்தை அடைந்து பதுங்கி வாழ்ந்து வருகின்றுன். இப்போது ஜாதி, மாமூல் என்ற சங்கதியையே உச்சரிப்பதில்லை. திருநெல்வேலிக்காரர்கட்கு அவர் எப்படிப் புதல்வனின் திருமணத்திற் கிசைந்தாரென்பது தெரியாது.



கிழவன் வெறியினுல் பிடிக்க முயல, சரோஜா பயந்து செல்வதை வரதராஜன் பார்த்தான்.

---

## “காங்கிரஸில் சேருக”

### ராஜாஜி அறிக்கை

திரு. ஸி. ராஜகோபாலாச்சாரியார் பின் வருமாறு எழுதுகிறுர்:—தமிழ் நாட்டா ரனைவரும் காங்கிரஸில் சேர வேண்டு மென்று நான் கேட்டுக் கொள்ளுகிறேன். சுதந்திரம் படைத்த நாட்டினராய் வாழ விரும்பும் ஆடவரும் பெண்டிரும் காங்கிரஸில் சேர வேண்டியது தங்கள் கடமை யென்பதை உணரல் வேண்டும். நாட்டில் சுதந்திரம் இல்லாது போனுல் எந்த வியாபாரமும் செழிப்படையாது. பூர்ண சுயராஜ்யம் பெறுவதுதான் காங்கிரஸின் லக்ஷியம். காங்கிரஸில் சேர்ந்ததால் மாத்திரம் யாரும் அரசியல் வாதிகளாய் விடமாட்டார்கள். அங்கத்தினரான பிறகும் அவரவர்கள் தங்கள் சொந்தக் காரியங்களை நடத்திக் கொள்ளலாம். நியாயமானதும் சாவதானமானதுமான முறைகளையன்றி பலாத்கார முறைகளைக் காங்கிரஸ் ஆதரியாது. வருடம் நாலணுச் சந்தாக் கொடுத்து யாரும் அங்கத்தினராகச் சேரலாம்.

நாட்டில் காங்கிரஸுக்குள்ள செல்வாக்கை நிரூபித்துக்காட்ட வேண்டிய தருணம் இப்பொழு தேற்பட் டிருக்கிறபடியால் ஏராளமானவர்கள் காங்கிரஸில் சேரவேண்டிய தவசியம். இதைச் சாதாரண விண்ணப்பமாகப் பாவித்து வாளாவிருந்து விடாமல் அனைவரும் காங்கிரஸில் சேர வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

---

சொந்த நாட்டிற் பரர்க்கடிமை செய்தே
துஞ்சிடோம்—இனி—யஞ்சிடோம்
எந்த நாட்டினு மிந்த அநீதிகள்
ஏற்குமோ?—தெய்வம்—பார்க்குமோ?

—பாரதியார்.




இன்ஸ்பெக்டர்:— (ஒரு பாடசாலையைப் பரிசோதிக்கபோது) டிராவலிங் ஏஜெண்டென்றால் என்ன?

மாணவர்:—ஒரு மனிதன்.

இன்ஸ்பெக்டர்:— அப்படியானால் நான் ஒரு டிராவலிங் ஏஜெண்டா?

மாணவன்:— நீங்கள் ஒரு கமிஷன் ஏஜெண்டு சார்.

* * *

ஒரு பட்டிக்காட்டான் டாக்டரொருவரிடம் மருந்து வாங்கிவிட்டு, விடை பெற்றுக்கொள்ள வணங்கினான். உடன்

டாக்டர்:—சரி; போ பின்னாடி "பில்" அனுப்புகிறேன்.

பட்டிக்காட்டான்:— இல்லே; நாங்கள் பில் உபயோகிப்பதில்லே. கட்டை தான் போட்டுச் சுடுவோம்.

* * *



நாகரிகன் ஒருவன் தன் மனைவி "டேம்":— காதலி நீ முதன் முதலில் யாருக்கு முத்தம் கொடுத்தாய், ஞாபகமிருக்கிறதா?

மனைவி:—(யோசித்துவிட்டு) கடைசியில் முத்தம் கொடுத்தவரைக்கூட ஞாபகமில்லையே.

* * *

ஒரு மோட்டாரோட்டியின் மனைவி ஓயாது திட்டிக்கொண்டிருக்கும் இயல்புடையவள். ஒரு நாள் டிரைவரைப் பார்க்க ஒருவர் வந்தார்.

வந்தவர்:—என் ஐயா! நீங்கள் ஒன்றும் செய்யாமலிருந்தும் தங்கள் மனைவி சண்டைக்கு வருகிறார்?

டிரைவர்:—அது வோர் செல்ப்ஸ்டார்ட்டர் சார்.

* * *

குரு:—உலகில் மிகச்சிறிய பொருள் யாது?

சிடர்:—மூக்குப்பொடி ஐயா.

* * *

சாப்பிட உட்கார்ந்தவர்:—என்ன ஐயா இது? தோசையா கல்லா? யார் சாப்பிடுவார்கள் இதை? மானேஜரெங்கே? கூப்பிடு.

பரிசாரகன்:— இம்மாதிரித் தோசையை அவர் தின்னமாட்டார்.

* * *

ஒரு பெண் புருஷனுக்காகச் சோப் வாங்கக் கடைக்குச் சென்று அங்கிருந்த பலவற்றைப் பார்த்தாள். சல்லிசாக "நாய்க்கு" என்றெழுதிய சோப் தான் கிடைக்குமென்று தெரிந்தது. ஆகவே அதனை யெடுத்தாள்.

கடைக்காரன்:—அம்மா அதில் நாய்க்கு என்று எழுதப்பட்டிருக்கிறதல்லவா? அது வேண்டாம்.

பெண்:—பரவாயில்லே. என் புருஷனுக்குப் படிக்கத் தெரியாது.

* * *

மாஜிஸ்திரேட்:—நீ கழியினால் ஏன் உன் மனைவியை அடித்தாய்?

குற்றவாளி:— உலக்கையைத் தேடினேன்: கிடைக்கவில்லே; ஆதலால்.

* * *

ரயில் புறப்படப் போகும் சமயத்தில் "கார்டு பிளாட் பாரத்தில் நின்று கொண்டு பிகிலே ஊதினார். அதனைப் பார்த்துக் கொண்டிருந்த ஒரு நாட்டுப்புறப் பெண்:—ஐயா, ரயில்கார ஐயா! அந்தக் குழாயை என் குழந்தையிடம் கொடு; கொஞ்சம் ஊதிவிட்டுத் தருவான்.

* * *

வாத்தியார்:—உன் தந்தை 5 பெர்செண்டு வட்டிக்கு 5000 போட்டிருக்கிறார். அப்படியானால் மாதம் எத்தனை ரூபாய் கிடைக்கும்?

சங்கரன் வாய் திறக்கவே யில்லே— அதற்குப் பதிலாக முகம் வெறுப்புக் குறியைக் காண்பித்தது.

வாத்தி:—ஏன் சும்மாவிருக்கிறாய்?

சங்கரன்:—நீங்கள் இந்த யுகத்தில் நடை பெற முடியாத விஷயத்தைச் சொல்கிறீர்கள். என்ன சொல்வேன் நான்?

* * *



ஒருவர்:— உன்னிடம் மாமிசம் சாப்பிடாதே யென்று டாக்டர் கூறியிருக்கிறார்; அதற்கு மாறாக நடந்து கொள்கிறாயே.

நோயாளி:— பாவாயில்லே. டாக்டர் கோபித்துக்கொள்ள மாட்டார். அவருடைய மாமனார் ஹோட்டலில் தான் சாப்பிட்டு வருகிறேன்.



## கிளியை நலம் வினவுதல்.

ராய. சோ.

திருவாய் திறந்து, சிறகார்
கிளியே! சிறையுறையும்
பெருவாழ் வுடையேன்; பிறிதோர்
சிறைவாழ், எனக்கினிய,
மருவார் குழல்என் மனையாள்
சுகமோ? மதில்கடந்து
வருவார் நினையன் றிலரே
எவரும்; வழுத்துவையே!

"காந்தி கலித்துறை யந்தாதி"

சிறையிலிருக்கும் காதலன், பெண்கள் சிறையுள் இருக்கும்தன் காதலியின் நலத்தைக் கிளியினிடம் கேட்கின்றான் இப்பாட்டின் கருத்தை இந்த ஓவியம் விளக்குகின்றது.

# மின்வெட்டு

கன்னியுடன் ஆடவர் மோதியதாக 25 பவுன் மானநஷ்ட மளிக்கப்பட்டது.

—செய்தித் தலைப்பு

அளித்தது மானநஷ்டமா? உபகார நிதியா?

*  *  *

எல்லைப்புறத்தில் மூளை வியாதி

—செய்தி.

அவசரச் சட்டம் செய்த குழப்பத்தின் கதி போலும் இது.

*  *  *

பாடியாலா சமஸ்தானத்தைச் சேர்ந்த பிசால் என்ற கிராமத்தில் ஒரு பெண் தன் படுக்கை யறையில் தூங்கிக் கொண்டிருந்தபோது இரு திருடர்கள் அவளறைக்குள் புகுந்து நகைகளைத் திருட முயன்றனர். அவள் திடீரென விழித்துப் போராடி ஒரு திருடனை வெளியே தூக்கி எறிந்துவிட்டாள்; மற்றொருவனையும் ஓட்டிவிட்டாள்.

பெண்கள் அபலைகள் என்று கூறும் பழங்கிழங்களை இவள் கையில் ஒப்படைக்க வேண்டும்!

*  *  *

ஆடவர்கள் மாதர்களின் பகைவர்களல்ல.

—குக்கிலியா பிரசங்கம்.

அடடா! ரோடில் போகும் பெண்ணைப் பார்க்கும் பார்வையைப் பார்த்தால் போதுமே! எந்த மடையனாவது புருஷர் பெண்களின் பகைவர்களென்று கூறுவானா?

*  *  *

ரூபாய் ஒன்றரை லஞ்சம் வாங்கிய குற்றத்திற்காக ஒரு பேஷ்கார் தண்டிக்கப்பட்டார்.

—கல்கத்தாச் செய்தி.

தண்டித்தது நியாயம்தான். ஏன் ஒன்றரை மட்டிலும் வாங்குகிறார்?

*  *  *

இருமல் இளைப்புத் தீர்ந்துவிட்டது.

—மருந்து விளம்பரம்.

அப்படியானால் மருந்து தேவையில்லையே.

*  *  *

திருட்டு ஒரு லாபகரமான தொழிலல்ல.

—ஒரு மாஜிஸ்திரேட்.

ஆம்; அதைவிட லாபகரமான தொழில் அவருக்குத் தெரியுமல்லவா?

*  *  *

உயிர்ப் பிராணிகளைக் கொன்று யாகம் செய்வது அக்கிரமம்தான். ஆனால் அதற்குச் சட்டம் செய்யச் சம்மதிக்கமாட்டேன்.

—ஜீவகாருண்யக் கூட்டத் தலைவர் பிரசங்கம்.

இது பிரசங்கமா? அதிகப்பிரசங்கமா?



பூர்வீகத் தூப முறையையும் நவீன தூப முறையையும் கையாளுகின்றார்! தந்தைக்கு மகன் இளைத்தவனாகத் தெரியவில்லை.

## காங்கிரஸ் வரவேற்புக் கமிட்டி

### ஸ்ரீ. நாரிமனுக்கு தலைவர் பதவி

காங்கிரஸ் வரவேற்புக் கமிட்டியின் முதல் கூட்டம் 15-ந்தேதி பம்பாயில் ஜின்னா மண்டபத்தில் நடந்தது. அப்போது கீழ்க்கண்ட நிர்வாகிகளைத் தேர்ந்தெடுத்தனர்:—

கமிட்டியின் தலைவர் பதவிக்கு ஸ்ரீ கே. எப். நாரிமனை ஏகமனதாக தேர்ந்தெடுத்தார்கள்.

உபதலைவர்கள் ஸ்ரீமான்கள் கே. எம். முன்ஷி, புலாபாய் தேசாய், நாகின்தாஸ், மாஸ்டர். பிரெல்வி, ஜீனா ராய்ஜோஷி, கபாடியா, காதில்கார், டாக்டர் ராஜாபாலி பட்டேல், ஸ்ரீமதி பெரின்பென் காப்டன், ஸ்ரீமதி சாந்தா பென் படேல்.

காரியதரிசிகள்:—ஸ்ரீமான்கள் அபிகாலி ஜாபர்தாய், எஸ். கே. பட்டேல், கணபத் சங்கர் தேசாய், கனவந்த கபாடியா, பி. எஸ். பத்ரகார்.

பொக்கிஷதாரர்கள்:—ராஜா பகதூர் சிவலால் மோதிலால், மூலாராஜ நரோசன் தாஸ்.

ஸ்ரீ. யூசப் மேஹராலியை ஜெனரல் தளபதியாக ஏகமனதாய்த் தேர்ந்தெடுத்தனர்.

42 அங்கத்தினர்க ளடங்கிய செல்வாக்குப் பொருந்திய ஒரு நிர்வாகக் கமிட்டியையும் நியமித்திருக்கிறார்கள். மேற்படி கமிட்டிக்குப்பற்பல உபகமிட்டிகளை நியமிக்கவும் அதிகார மளித்திருக்கிறார்.





தொடர் கதை

# கடுவழியில் காதலி

(Eesy)

## சீர்திருத்த மணம்

உலகில் மக்கள் அனுபவிக்கின்ற பலவித இன்பங்களில் பிரசங்கம் செய்து பெறுவது மொன்றாகும். நூற்றுக்கணக்கான ஜனங்கள் குழுமியிருக்கும் ஒரு பெரிய கூட்டத்தில் ஒருவன் வெற்றிகரமாகப் பிரசங்கம் செய்து நன்மதிப்புப் பெற்றுவிட்டானென்றால் உண்மையில் அவன் ஓர் இன்பவுலகை யடைந்தவனே யாகிவிடுகின்றான். அவன் எண்ணிறந்தவர்களால் புகழப்படுகின்றான்; அன்பு செலுத்தப்படுகின்றான்; உபசரிக்கப்படுகின்றான்; பலருடைய இரகசியப் பேச்சுகட்கும் கண்ணேறுகட்கும் இடமாகின்றான். பலர் அவனுக்கு வித்வான் என்ற பட்டமும் சூட்டுகின்றனர். எனவே ஒருமுறை பிரசங்கம் செய்து ருசிகண்டவர்கள் ஒருபோதும் வாளா விருப்பதில்லை; எவர் என்ன தடைசெய்தபோதிலும் எவ்வளவு முட்டுக்கட்டைகளேற்பட்ட போதிலும் பொருட்படுத்தாது பேசுந் தருணம் கிடைக்குமிடந்தேடி யோடிவிடுகின்றார்கள். அவ்வாறு ஓடுகின்ற "செட்டை"ச் சேர்ந்தவனே நான்.

ஒருதரம்—அதாவது ஒரு கிருஸ்மஸ் விடுமுறையில் கல்லூரி மூடப்பட்ட பிறகு, நான் தென்காசி சென்று அங்கு அத்தை வீட்டில் சிலநாள் தங்கியபிறகு, என் சொந்த ஊராகிய நாகர் கோவிலுக்குச் செல்லுமாறு தென்காசி—திருநெல்வேலிப் பாதையில் வந்துகொண்டிருந்தேன். வழியில் சேர்மாதேவியை யடைந்ததும் அங்குதற்செயலாய் கல்லூர்க்கந்தசாமி முதலியார் என்னைச் சந்தித்தார். அவர் எனது பழைய நண்பர்களில் ஒருவர். மூன்றாவது பாரம் முதல் இண்டர்மீடியட் வரையிலும் ஒன்றாய்ப் படித்தோம். அவரை நான் சந்தித்து மூன்று வருடமாகியிருந்தன. அவர் யாரையோ எதிர்பார்த்துக் கொண்டிருப்பது போல் பிளாட்பாரத்தில் உலாவிக் கொண்டிருந்தார். அவரைக் கண்டதும் நான் சந்தோஷமடைந்து ரயிலிலிருந்தபடியே "கந்தசாமி! எங்கே போகிறாய்? க்ஷேமமா?" என்று வாயார விளாவினேன். அதற்கு அவர் "கோவிந்தராஜா—நீயா! அடா!! உன்னைப் பார்த்து எத்தனை வருடமாயிற்று! நீ இந்துக் காலேஜில் பீ. ஏ. வகுப்பில் படிக்கின்றாய் என்றல்லவா கேள்விப்பட்டேன்! வா வா இறங்கு கீழே. அடுத்த ரயிலைப் பார்த்துக் கொள்ளலாம்" என்று வாய் நிறைந்த வார்த்தைகளால் கூறினார். அவர் தோற்றமும் மகிழ்ச்சியும் பொதுவாக செட்டிமார்நாட்டுக்கு மாற்றப்பட்டு உத்தரவு வரப்பெற்ற போலீஸ் இன்ஸ்பெக்டரின் ஆநந்தம் போன்றிருந்தது. உடன் நானும் மெத்த சந்தோஷம் கொண்டு "நீ எங்கு புறப்பட்டிருக்கிறாய்?" என்று கேட்டுக்கொண்டே கீழே குதித்தேன்.

அவர்:—கூனியூரில் ஓர் சீர்திருத்தத் திருமணம் நடைபெறப்போகிறது. பெரிய எதிர்ப்பில் நடைபெறுகிறதாம் அது. நான் அதற்காகப் போகலாமென்று பார்க்கிறேன். என்னோடு கூனியூர் செல்வாரெவராவது இறங்குகின்றார்களாவென்று பார்த்துக் கொண்டிருக்கிறேன்........

நான்:—சீர்திருத்தத் திருமணமென்றால் எப்படி?

கந்தசாமி:—ஒரு முதலியார் வகுப்பு விதவைக்கும், முதல் தாரத்தை இழந்த ஒரு முதலியாருக்கும் சீர்திருத்த முறையில் திருமணம் நடைபெறுகிறது.

விதவாக் கல்யாணம், சீர்திருத்தக் கல்யாணம், எதிர்ப்புக் கிடையில் நடைபெறுகின்ற கல்யாணம் என்றதும் எஜமான் எஜமானியர், வீட்டுச் சாவியை அப்படியே கொடுத்துவிட்டு 15 நாள் சேர்ந்தாற்போல வரமாட்டோமென்று வெளியூர் சென்றுவிடுவதைக் காணும் சமையற்காரனுக்கு எவ்வளவு ஆநந்தம் பொங்குமோ, அவ்வளவு ஆநந்தம்வந்து தசைகளுக்கெல்லாம் பயிற்சியளிக்கக்கூதூகலமடைந்து நண்பனோடு ஸ்டேஷனுக்கு வெளியே வந்தேன். எப்படியும் கூனியூரில் ஒரு ரசமான சொற்பொழிவு நடத்தத் தருணம் கிடைத்துவிட்டதென்ற ஆசை இருதயமென்ற "தில்லையில்" பரமசிவனை "ஆக்டு" செய்யலாயிற்று. நானும் நண்பரும் வெளியே நடந்து செல்கையிலேயே திருமணத்தைப் பற்றிப் பல பல வினவினேன்; அவர் நீளமாக விடையளித்துக்கொண்டே சென்றார்.

கூனியூர் சேர்மாதேவியிலிருந்து ஒன்றரை மைல்களுக்கப்பாலிருக்கும் ஓர் சிறிய கிராமம். அதனைச் சுற்றிலும் "கரிசற்காடு"களே நிறைந்திருக்கின்றன. என்றாலும், சற்றுத் தூரத்தில் பொங்கியெழுந்து நிற்கும் மேலைமலைத் தொடரின் வான்தரு நிரைகளில் தோய்ந்து வரும் மந்தமாருதத்தாலும், ஆங்காங்கு பரந்து நீர்தேங்கி நிற்கும் பற்பல குளங்களின் உறவினாலும், கவர்வீசித் தழைத்து நிற்கும் புளி, மா, பூவரசு, உயில், வேம்பு போன்ற அநந்தம் மரங்களின் சேர்க்கையாலும் தண்மையளிக்கப் படுகின்றது. அவ்வூரில் சுமார் 300 வீடுகள்தானுண்டு; ஜனத்தொகை சற்றேறக்குறைய 700-க்கு மேலிராது. அங்குள்ள ஜனங்கள் பல திறப்பட்ட ஜாதியைச் சேர்ந்தவர்களாயினும் கிறுஸ்தவர் வீடு சுமார் 25 இருக்கின்றன. இவர்கள் வெளியூர் சென்று கல்வியறிவு, நாகரிக உணர்ச்சி, புதிய வாழ்க்கைமுறையாகியவற்றைத் தெரிந்திருப்பதால் இவர்களுடைய செல்வாக்கு அவ்வூரில் அதிகம் என்னலாம்; ஆகவே கூனியூர் வாசிகள் நாட்டுப்புற மக்களேயெனினும் சற்று நாகரிகம் தெரிந்தவர்கள்.

நாங்கள் நாடிச்சென்ற கல்யாண இல்லம் முதலியார்களைச் சேர்ந்தது. அங்கு மொத்தமிருக்கும் முதலியார்கள் வீடு ஏழு. அவர்கள் அவ்வளவு ஆஸ்தியுடையவர்களல்லர். சுமார்4000, 5000, 6000த்துக் குட்பட்ட சொத்துடையவர்களாகவே இருந்தார்கள். அவர்கட்குள் - மேற்சொன்ன கிருஸ்தவர்கள் செல்வாக்கு அவ்வளவு ஊடுருவிச் செல்லவில்லையோ என்னவோ!— பல மூடப்பழக்க வழக்கங்களும் வைதீக வெறியும் ஊறி நின்றன. அத்தகைய முதலியார்கட் கிடையில் சீர்திருத்தத் திருமணம் நடைபெறுவதென்றால் ஆச்சரியமல்லவா?

அந்தத் திருமணத்தை நடாத்திக்கொடுப்பதாக இசைந்தவர் திருமலையப்ப முதலியார் என்ற ஓர் இளைஞர். அவருக்கு சுமார் 30 வயதிருக்கலாம். போதுமான தமிழ் ஆங்கிலமொழிகளைக் கற்று உலக அறிவு பெற்றிருந்ததால் அவர் இதயத்தில் சீர்திருத்த வேட்கை கொழுந்து

விட்டு எரிந்து கொண்டிருந்தது. அவருக்குச் சுமார் 6000 பெறுமான ஆஸ்தியுண்டு. ஒரு காலத்தில் காங்கிரசிலீடுபட்டு வேலை செய்து அந்தப் பகுதியில் நல்ல பெயர் பெற்றிருந்தார். அவருடைய ஆசை வைதீகப்பித்து ஒழிந்தவன்றுதான் மனிதன் உண்மையான விடுதலை பெறுகின்றான் என்பதாம். ஏனென்றால் இதர அடிமைத்தளைகளைப் போலல்லாது வைதீக விலங்கு மனிதனுக்குட் புகுந்து முக்கிய உறுப்பாகிய இருதயத்தையே அடிமைப்படுத்தி விடுகின்றதென்று அவர் அடிக்கடிக் கூறுவார். ஒரு நாள் அவர் காதில், திருநெல்வேலியிலுள்ள ஒரு தாரமிழந்த முதலியாரும், கடையத்திலுள்ள ஒரு விதவைப் பெண்ணும் திருமணம் செய்து கொள்ள ஆசைப்படுகின்றார்களென்றும் ஆனால் இரு ஊர்களிலும் வைதீகர்கள் ஆர்பாட்டம் பலமாயிருந்து வருவதால் கல்யாணம் தடைப்பட்டிருக்கின்றதென்றும் செய்தி வீழ்ந்தது. உடனே அவர் இருவூர்கட்கும் சென்று தம்பதிகள் கட்சியாரைக் கண்டு பேசித் திருமணத்தைத் தாம் தமதில்லத்தில் வெற்றிகரமாக நடத்திக்கொடுத்து விடலாமென்று ஒத்துக்கொண்டார். அதன் மேல் தான் மேலே கூறியவாறு கூனியூரில் சீர்திருத்தத் திருமணம் நடை பெறவிருந்தது. கல்யாணம் நடைபெறுவதாய்க்குறிப்பிடப்பட்ட நாளுக்கு ஒரு வாரம் முந்தியே தம்பதிகளும் சுற்றத்தாரும் கூனியூர் வந்து விட்டார்கள். திருமலையப்ப முதலியார் பெண்ணையும், புருஷனையும் 'பக்கா' செய்த வரையிலும் திருமண அழைப்பு விடுக்கவேயில்லை. இப்படிப்பட்ட புத்தி சாதுரியம் திருமலையப்ப முதலியாருக்கு நிரம்பவுண்டு.

குறித்த திருமணத்தன்று பல ஊர்களிலுமிருந்தும் ஏராளமான ஜனங்கள் கூனியூருக்கு வந்தார்கள். நானும் கந்தசாமி முதலியாரும் சேர்மாதேவியிலிருந்து சுமார் ஒரு மைல் தூரம் போனதும் வழியில் ஏராளமான ஜனங்கள் வருவதைக் கண்டோம். மணப் பந்தலைக் கிட்டியதும் சுமார் 500 பேர் வரையிலும் கூடியிருப்பது தெரிந்தது. இதனை வேறு மொழிகளில் சொல்வதானல் கொட்டகை நிறைந்து வெளியிலும் சிலர் நின்றுகொண்டிருக்கும் படியாக ஜனங்கள் கூடிவிட்டனர் என்னல் வேண்டும். நாங்கள் கல்யாணப் பந்தலை அடைந்தபோது கல்யாணத்திற்கு ஒரு மணி நேரம்தான் இருந்தது; ஆதலால் சீக்கிரத்தில் ஸ்நானம் செய்து, புத்தாடை புனைந்து கூட்டத்திற்கு எங்களைத் தயாரித்துக் கொண்டோம்.

சரியாக மணி நாலானதும் கல்யாண வைபவம் ஆரம்பித்தது; கல்யாணப் பந்தலின் அழகு அபாரம்!! வாழைகள், ஈச்சங் குலைகள், தென்னையிலைத் தோரணங்கள், பனையிலைப் பூ வேலைகள், கூந்தற்பனைக் குலைகள், பாக்குக் குலைகள் ஆகியவற்றைச் செம்மையாகக் கட்டி திருமலையப்பர் தம் அபிலாஷைக்கு எடுத்துக் காட்டாய்ப் பந்தலை அமைத்துவிட்டார். அங்கு குழுமியிருந்த எல்லோருக்கும் உட்காருவதற்குப் "பெஞ்சு"கள் வழங்கப்பட்டன. பெஞ்சுகட்காகத் தோழர் பாலையா பிள்ளை நடத்திவரும் பாடசாலை பெரிதும் உதவியது. இனிமையான கிராம போன் பிளேட்டுகள் ஓர் பாங்கரில் மழை பெய்ய, இன்னொருபால் பன்னீர் செண்டு ஊதுவத்திகள் மூக்குக்கு விருந்தூட்டின. இத்தகைய பந்தலில் மணமக்கள் வரும் நேரமானதும் எல்லோரும் புரட்சித் துண்டுப் பிரசுரம் அகப்படுவதற்காக வீட்டைச் சோதனை போடும் பொலீஸ்காரரைப் போல எதிர் பார்த்துக் கொண்டிருந்தார்கள். சுமார் அரைமணி நேரம் எல்லோரும் காத்திருந்ததும் புரட்சித் துண்டுப் பிரசுரம் போன்ற தம்பதிகள் அழகாக—ஆனால் எளிய—மணக்கோலம் பூண்டு ஏற்கனவே போடப்பட்டிருந்த நாற்காலிகளில் வந்துட்கார்ந்தனர். மணமக்களின் இணைந்த தோற்றத்தைக் கண்டு ஆ! ஆச்சரியப்படாதார் எவர்?

தம்பதிகள் வந்துட்கார்ந்து 5 நிமிஷமானபோது பிரசங்கம் செய்பவர்களாகிய நான், கந்தசாமி, தலைவரான தோழர் குப்புசாமி ஆகியோர் வந்து மணமக்களைச் சுற்றி யுட்கார்ந்தோம். உடன் வைபவம் ஆரம்பித்தது. தோழர் குப்புசாமி தம் தலைமைப் பிரசங்கத்தைத் தொடங்கினர். அது பொருட் செறிவுடைத்தாக இருந்தாலும் 500 பேர்கள் நிறைந்த பெருங் கூட்டத்தைத் திருப்திப் படுத்துவதா யிருக்கவில்லை. சுமார் அரைமணி நேரம் பேசிவிட்டு உட்கார்ந்தார். பிறகு பேசுவதாக நிதானம் 10 பேர்கள் ஒப்புக்கொண்டிருந்தாலும் தலைவர் தோல்வியை முன்னிட்டு அவர்கட்குக் காலெழும்பவில்லை, அவர்கள் ஒருவருக்கொருவர் "நீங்கள் பேசுங்கள், நீங்கள் பேசுங்கள்" என்று முணுமுணுத்துக் கொண்டேயிருந்தார்கள். உடனே நானெழுந்து தம்பதிகளை மாலைமாற்றிக் கொள்ளத் தலைவரைக் கொண்டு சொல்லச் சொன்னேன். உடன் அவர் சொல்ல இரு "சடங்கு களும் முடிவுற்றன. பின் தலைவர் கட்டளைப்படி நான் பேச வெழுந்தேன்.

ஆ! அப்போது எனக்கு என்ன மகிழ்ச்சி வந்தது தெரியுமா? "ஓவர் லோடு" போட்டுத்தன் பஸ்ஸை யோட்டிக்கொண்டு போகும் ஒரு டிரைவர், எதிரே வரும் பிளஷர்காரில் டி. எஸ். பி. வருகின்றாரென்று நினைத்து உடல் நடுங்கி, உயிர் கலங்கி, ஊன் ஒடுங்கி ஊர்ந்து வர, சற்று நேரத்திற்குள் காரிலிருந்தவர் தம் சம்சாரம் என்று தெரிந்தால் எவ்வளவு மகிழ்ச்சி கொள்வானே அது போலவும் திடீரெனப் பாடசாலை ஒரு மாதம் மூடப்பட்டு விட்டது என்ற செய்தியைக் கேட்ட மாணவர்களைப் போலவும் சந்தோஷங் கொண்டேன். ஆகவே என் வாயசைய உள்ளம் வார்த்தைகளை வாக்கியங்களை கருத்துக்களை வாரி வாரிப் பேருக்கத்தோடு பொழியத் தொடங்கினேன். பிரசங்கம் சுமார் 5 நிமிஷம் நிகழ்ந்ததும் வார்த்தைகள் மணப்பந்தலை முழக்க ஆரம்பித்தன; அது கண்ட எனக்கே உற்சாகம் குடுமியைப் பிடித்தசைக்கத் தொடங்கியது. நான் அங்குமிங்கும் பார்த்துப் புன் முறுவல் தூவிக் கைகால்களை அசைத்து விதானம் செய்யத் தொடங்கினேன். ஜனங்களெல்லோரும் பெரும் பொக்கிஷத்தைத் தலை நிறைய வாரிக் குவிப்பதுபோல சந்தோஷத்தோடு கேட்டுக்கொண்டிருந்தார்கள். நான் பிரசங்கத்தில் மணத்தின் தேவை, ஆண்பெண் சமத்துவம், பெண்ணடிமையின் கொடுமை, விதவைகள் உரிமை, வைதீக மணமுறையின் அலங்கோலம், தாலிகட்டுவதின் அர்த்த மின்மை, சீர்திருத்தத்தின் தேவை முதலிய அநந்தம் விஷயங்களைப்பற்றிப் பேசினேன். இவற்றை யொவ்வொன்றையும் பற்றி அழுத்துகையில் ஒவ்வொருவர் முகமும் ஒவ்வொருவித உணர்ச்சியைக் காண்பித்தன. அவற்றைக் காணக்காண எனக்கு வந்த ஆநந்தத்திற்கு அளவுண்டா!

(தொடரும்)



கல்கத்தா நாஷனல் இந்தியன் லைப் அஷ்யூரன்ஸ் கம்பெனியின் ஜெனரல் மானேஜராகிய திரு. S. P. போஸ் 10-7-34-ந் தேதி ஹோட்டல் பளோட்டாவில் உபசார விருந்தளிக்கப்பட்டார். விருந்தளித்தவர் மேற்படி கம்பெனியின் சென்னைக் கிளை மானேஜராகிய திரு. V. K. செட்டி. படத்தில் திரு. லாடன் (மேயர்) திரு. மு. சித. சிதம்பரம் செட்டியார், கான்பகதூர் ஹாஜி ஆடம் சையத் (மாஜி ஷெரிப்) மிஸ்டர் A. ஹெயில்ஸ், ராவ் பகதூர் G. A. நடேசன், ராவ்சாஹிப் P. ராமச்சந்திரன் செட்டி, ராவ்சாஹிப் T.S. கச்சாபகேச முதலியார் முதலியோர் காணப்படுகின்றனர். —P.P.B.



இந்த வார ஆரம்பத்தில் திருவல்லிக்கேணி கிருஷ்ணம்பேட்டையில் நெருப்புப் பிடித்தது. —P. P. B.






சர்வதேச சங்க ஆலோசனைக் கமிஷனின் பெண்கள் பிரதிநிதியாகச் சென்றிருந்த ஸ்ரீமதி ராதாபாய் சுப்பராயன் அவர்கள் இவ்வாரம் சென்னை வந்து சேர்ந்தார். நன்கு வரவேற்பளிக்கப்பட்டது. படத்தில் திரு. வாலில்லா வெங்கடேஸ்வர சாஸ்திரிலு, திரு. வி. டி. அரசு, எம். எல். சி. முதலியோர் காணப்படுகின்றனர். —P.P.B.



விஞ்ஞான நிபுணர் ஸர். ஸி. வி. ராமன் அவர்களின் சகோதரரும் அக்கௌண்டண்டு ஜெனராலுமாகிய திரு. ஸி. வி. சுப்ரமணியம் ஐரோப்பிய பிரயாணத்தின் பின் சென்னை வந்து சேர்ந்தார். —P. P. B.

# ஆசையை யொழித்த ஆறுமுகம்

(திரிபுரம்)

திருவள்ளுவர், அதிவீராம பாண்டியன் போன்ற புலவர்கள் எல்லாம் ஒருவன் உள்ளே ஆசையை வைத்துக் கொண்டிருந்தால் ஒரு பிறப்பைப் பெறுவான் என்று கூறியிருக்கிறார்கள். தமிழ் நாட்டு ஏழைகள் பலர் தங்கள் ஆசையை முற்றுவித்துக் கொள்ள முடியாத போதெல்லாம் மேற்படி வேதாந்தத்தைப்பேசி மனச்சாந்தியடைந்து வருகிறார்கள். ஆனால் ஆறுமுகம்என்பவர் அப்படியால்லர். அவர் உண்மையாகவே ஆசையை விட்டு (தனக்கிருப்பதை வைத்துக்கொண்டு) காலம் தள்ள வேண்டுமென்று நினைப்பவர். அவர் வழி நடக்கும் போது கண்ணில் ஏதாவது தட்டுப் பட்டாலும்கூடக் கையால் தொடமாட்டார். "பிறர் பொருள் நமக்கெதற்கு? அதன் மேல் ஏன் ஆசை வைக்க வேண்டு"மென்று நினைத்துப் போய் விடுவார். அதேபோல யாராவது ஒரு பொருளைத் தவறுதலாகக் கொடுத்து விட்டால் 'எனக்கெதற்கு இது' என்று எப்படியும் திருப்பிக் கொடுத்து விடுவார். இது நல்ல குணமோ கெட்ட குணமோ எதுவானாலும் சரி; ஆறுமுகம் இக்குணத்தைப் பலமாகக் கைப்பற்றி வந்தார் என்பது தேற்றம்.

அவருக்குத் திருச்சி கோமன் அன் கோ என்ற கம்பெனியில் வேலை. அக்கம்பெனிப் புரோப்ரைட்டரான கோமன் துரை ஒரு மகாகோபி. இந்தியரென்றால் கேவலமான பிராணிகள் என்று மதிக்கும் இயல்பினர் அவர். சமீபகாலங்களில் ஏற்பட்ட சுயாராஜ்யக் கிளர்ச்சியால் அவருக்கு வந்த வயிற்றெரிச்சல் சொல்ல முடியாது. கல்கத்தா வில்லியேர்ஸ் துரைக்கு அடிக்கடி யோசனை சொல்லிக் கொடுப்பாராம். இவருக்கு நித்தம் கம்பெனி வேலைக்காரர்களான இந்தியர்களிடமிருந்த எரிச்சல் கால், அரை, முக்கால் அல்ல.

ஒரு நாள் ஆறுமுகம்—ஒரு மாதத் தொடக்கத்தில்—ஆபீசில் சம்பளம் வாங்கினார். அங்குள்ள சம்பள முறை சௌகரியமானதாகும். சம்பந்தப்பட்ட கிளார்க் ஒவ்வொரு சம்பளத் தேதியிலும் ஒவ்வொரு வேலைக்காரனுடையவும் சம்பளத் தொகையை ஒரு கவரில் (உறையில்) போட்டுப் பெயரெழுதி வைத்துவிடுவர். மாலையில் வீடு செல்லும்போது வேலைக்காரர்கள் அவரவர்கள் பெயர் போடப்பட்டிருக்கும் உறைகளை எடுத்துக் கொள்ள வேண்டும்.

இவ்வாறு குறிப்பிட்ட நாளையில் ஆறுமுகம் அவருடைய உறையை எடுத்துக் கொண்டு வீடு நோக்கிச் சென்றார். வீட்டை அடைந்தபோது இரவு சுமார் மணி 8 இருக்கலாம். அவர் வழக்கம் போல சைகிளை வைத்து விட்டு வெளியே சென்று உலாவிய பின்னர் சாப்பிட்டுச் சற்று நேரம் கடவுள் ஆராதனையின் பின்பு படுக்கை புகுந்தார்.



ஸ்ரீமதி. மர்பி (ஜஸ்டிஸ்) சென்ற வாரம் இங்கிலாந்துக்குப் பிரயாணமானார். —S.P.B.

மறு நாள் காலையில்—ஞாயிற்றுக்கிழமை ஆதலால்—கணக்கு முதலியவற்றைப் பரிசோதித்தார். அப்போது பாருங்கள்! என்ன ஆச்சரியம்! ஆறுமுகம் உறைக்குள் ஐந்து ரூபாய் நோட்டு 7 இருப்பதற்குப் பதிலாக 8 இருக்கக்கண்டார். கண்டதும் வந்த சங்கடத்திற்கு எல்லையில்லை. "அடா ரூ. 5 அதிகம் தந்துவிட்டாரே சுந்தரம்! என்ன பாவம் செய்ததினாலோ இப்படி ஏழையாய்ப் பிறந்து தினசரி 18 மைல் சைகில் விட்டுத் திண்டாடிக் காலம் தள்ளுகிறேன். அந்த லட்சணத்தில் கோமன் துரையின் பணத்தை நான் முறையில்லாது அனுபவிக்கவா? அடாது அடாது" என்று தனக்குள் கூறிக்கொண்டு—ஏதோ கருநாகம் கடித்துவிட்டாற்போல கலங்கிப் பக்கத்து வீட்டு அப்பையாவைப் பிடித்துச்சம்பளம் பேசி 5 ரூபாய் நோட்டையும் ஒரு கடிதத்தையும் கொடுத்து திருச்சி கோமன் துரையிடம் அனுப்பினார். கடிதம் வருமாறு:—

ஸார்,

நேற்று, கிளார்க் சுந்தரம் ஐயர் என் சம்பள ரூபாய் 35 தரவேண்டியதிருக்க 40 ரூபாய் தந்துவிட்டார். நான் கம்பெனி ரூபாயை அபகரித்துக் கொள்வது தகுதியல்ல. ஆதலால் இக்கடிதத்தைக் கொண்டுவரும் அப்பையாவிடம் 5 ரூபாய் கொடுத்தனுப்பி யிருக்கிறேன். இன்று ஞாயிற்றுக்கிழமை யாதலால் தபால் வசதியில்லை. அப்பையாவுக்குச் சம்பளமாக ரூபாய் ஒன்றரை பேசியிருக்கிறேன். தங்கள் ரூபாய் பற்றி அத்தொகை செலவிடப்படுவதால் $3\frac{1}{2}$-யை நீங்கள் பெற்றுக்கொள்க. பதிலும் ரசீதும் வேண்டும்.

ஊழியன்,

ஆறுமுகம்.

அப்பையா இக்கடிதத்தோடு திருச்சி (பொன்மலைக்கு) வந்து துரையிடம் ரூபாயையும் கடிதத்தையும் கொடுத்தான். துரை, சுந்தரம் ஐயர் செய்த தவறைப் பார்த்ததும் கோபசொரூபியாய் விட்டான். ஆகவே அப்பையாவுக்கு ஒன்றரைக்குப் பதில் ரூ. 2½ கொடுத்துவிட்டு, உடன் சுந்தரத்திற்கு ஓர் "வேலை விடுதலைச் சீட்டு" எழுதினான். அதோடு சம்பளத்தில் ரூபாய் 50-ம் பிடித்தான்.

* * *

ஆறுமுகம் ரூபாய் ஐந்தை அனுப்பிவிட்டதாகிய அருஞ்செயலைப் புரிந்ததால் மனப்பூரிப்புடையவனாகித் தன் வீட்டின் முற்புறம் வராண்டாவில் உட்கார்ந்திருந்தான். வாயில் "ஏமினி போகடுசு" என்ற கீர்த்தனம் உல்லாசமாகத் தாழ்ந்த குரலில் வெளிவர இடது கை நீண்டு கிடந்த தலைமயிரைக் கோதிக்கொண்டிருக்க மனம் ஏதோ சங்கற்ப உலகில் உலாவ மகிழ்ந்திருந்தது அவன் முகம். அப்போது மனைவியாகிய திரிபுரசுந்தரம் மெல்ல வெளியே வந்து காதலன் முன்னால் குழைந்து நின்று புன்னகை புரிந்துவிட்டு நோட்டை எடுத்துக்கொண்டீர்களல்லவா? இரண்டு ரூபாயைத் தாருங்கள்.—உடன் கொடுத்துவிடுவோம்" என்றாள்.

ஆறுமுகம்:—ஏது ரூபாய்? யாருக்குக் கொடுக்கப்போகிறாய்?

திரிபுர:— பார்வதி அக்காளுக்கு அன்று மூன்று ரூபாய் கடன் கொடுத்தேனல்லவா? அவள் 5 ரூபாய் நோட்டைத் தந்தாள். அதை உங்கள் சம்பள ரூபாய் முப்பதைந்தோடு வைத்துவிட்டு, நீங்கள் வந்த பிறகு இரண்டு ரூபாயையும் வாங்கிக் கொடுக்கலாமென்றிருந்தேன்.

ஆறு:—என்ன நீயா ரூபா 5 வைத்திருந்தாய்!

என்று கூறிக்கொண்டு விழித்தான். கண், வாய், மூக்கு எல்லாம் தனித்தனியே ஏதேதோ செய்யத் திண்டாடினான். திரிபுரத்திற்கு ஒன்றும் விளங்கவில்லை.

உடன் ஆறுமுகம் விஷயத்தைத் தெரிந்துகொண்டு நாகப்பன் என்ற ஒருவனுக்குச் சம்பளம் பேசிக் கோமன் துரையிடம் ஒரு கடிதத்தோடு அனுப்பினான். அக்கடிதமாவது:—

ஐயா,

சுந்தரம் ஐயர் தவறவில்லை— நானே தவறி விட்டேன்—ரூபாய் 5ம் கம்பனியைச் சேர்ந்ததல்ல. என் மனைவிக்குச் சொந்தம். ஆதலால் வருகிற நாகப்பனிடம் இரண்டரையும் கொடுத்தனுப்பவும்.

ஆறுமுகம்.

இக்கடிதத்தைக் கண்டதும் என்ன நினைப்பான்கோமன். சுந்தரத்திற்கு எழுதிய ஆர்டரைத் திருப்பி "நிரந்தர விடுதலை" (டிஸ்மிஸல்) ஆக ஆறுமுகத்திற்கு எழுதினான். ரூபாய் ஒன்றும் கொடுக்கவில்லை. ஆதலால் ஆறுமுகமே கையிலிருந்து ரூபாய் ஒன்றரை கொடுக்க நேர்ந்தது.

அதிகமேன்! திங்கட்கிழமை ஆறுமுகம் ஆபீஸ் சென்றதும் அடியில் வரும் உத்தரவு கிடைத்தது.

"நீர் அநாவசியமாகப் புரோப்ரைட்டருக்கு முட்டாள் தனமான கடிதங்கள் எழுதவும், நீரே ஒரு யோசனை அற்றவர் என்று காண்பிக்கவும் 'பிரபாதியான வேலைக்காரர்களைக் குறை கூறவும் செய்வதால் வேலையிலிருந்து இன்று முதல் நீக்கப்பட்டிருக்கிறீர்".

இந்த உத்தரவைப் பெற்றதும் நோக வீடு திரும்பினான் பிறர் பொருளில் ஆசையில்லா ஆறுமுகம் என்று சொல்லவாவேண்டும்?

## மகாத்மா—சர்தார் சந்திப்பு.

சிறையிலிருந்து வெளிப்பட்ட சர்தார் படேல் மிகவும் இளைத்திருக்கிறார். ஆனால் உற்சாகத்துக்குக் குறைவில்லை. அதிசீக்கிரத்தில் காந்திஜீயைச் சந்திக்கப் புறப்படுவாரென்று தெரிகிறது. பத்திரிகைப் பிரதிநிதிகள் சர்தாரைப் பேட்டி கண்டபோது அவர் கூறியதாவது:—காங்கிரஸ்காரர்கட்குள் ஒற்றுமை வேண்டும். தற்போது ஒற்றுமையின்மையே பெரிய குறையாக இருந்து கொண்டிருக்கிறது. அற்ப அபிப்பிராய பேதத்தை முன்னிட்டு பிளவுபட்டால் மகத்தான தியாகம் செய்தவர்கட்குத் தீங்கிழைத் தவராவோம். சட்ட சபைப் பிரவேசத்தை நான் ஆதரிக்கா விட்டாலும் காங்கிரஸ் செய்யும் எந்தத் தீர்மானத்துக்கும் கட்டுப் பட்டு விடுவேன்.

---

ருஷ்யாவில் சம்பள உயர்வு

யுத்த தளவாட வேலை நடைபெறும் தொழிற்சாலைகளில் 100-க்கு 10 வீதம் இனி சம்பள உயர்வு செய்து கொடுக்கப்படும். வருமானவரி 100-க்கு 50 வீதம் குறைக்கப்படும். போனஸ் தொகையும் கொடுக்க ஏற்பாடாகியிருக்கிறது.





# எனது தபாற் பெட்டி

(பகிரதன்)

லால்நாத சாஸ்திரி,

காசி.

சனாதன சிகாமணி!

நீங்கள் பெருங் கருணைபூத்துத் திருவுளங்கனிந்து காந்தி என்பவர் பைத்தியக்காரத்தனமாக 'ஆஜ்மீர் வைதீகரை அடித்ததற்காக உபவாச மிருக்கப் போகிறா' ரென்பதைத் தெரிந்துகொண்டு அவருக்கு, உண்ணாவிரதத்தை நிறுத்தி இன்னொருதரம் ஆலோசித்துச் செய்யும்படி. திருத்தந்தி அடித்திருப்பதாகப் பத்திரிகைகளில் செய்தி வந்திருக்கிறது. இதனைப் பார்த்தால்—நேரான பாஷையில் எழுதுகிறேன்—சிலர் "ஆஹா! சனாதனிகளுக்கும் இரக்கமிருக்கிறது. காந்தி பக்தி இருக்கிறது; ஆனால், கொள்கை பற்றித்தான் போராட்டம். ஆகலால் அவர்களைக் குறை சொல்வது அநீதி" என்று நினைத்து விடலாம். தங்கள்மீது அபிமானமும் கொண்டு விடலாம்; அத்தகையோர் சற்றுநேரம் கண்ணடைத்துக்கொண்டு சனாதனிகள் சில மாதங்களாய் ஆங்காங்கே செய்திருக்கும் ஆபாச மிருகத்தனமான, அட்டூழியச் செயல்களைத் தியானித்துப் பார்க்கட்டும். அதோடு காந்திஜீ நாகப்பூருக்குச்சமீபம் சுற்றுப் பிரயாணம் செய்தபோது அவர்கள் செய்த காரியங்களையும் நினைத்துப் பார்க்கட்டும்.

சாஸ்திரிகளே! மகாத்மாவோடு நாகப்பூரில் சுற்றுப் பிரயாணம் செய்ததும் திட்டித்திட்டிப் பஜனை பாடியதும், காரின் முன் படுத்துச் சத்தியாக்கிரகம் செய்ததும், ஒரு சதிசெய்து காந்திஜீயை அழித்துவிடப் பார்த்ததும் (வதந்தி) துண்டுப் பிரசுரங்கள் வழங்கி சாபம் போட்டதுமான ஒரு டஜன் சனாதனிகள் தங்களுடைய சீடர்களல்லவா! தங்களால் அனுப்பப்பட்டவர்களென்றுதானே கேள்வி.

அப்படிச் செய்திருந்த நீர்—எவ்வளவோ எதிர்ப் பிரசாரம் செய்து பார்த்த நீர்—இன்று காந்திஜீயிடம் உண்ணாவிரதம் இருக்க வேண்டாமென்று சொல்கிறீரே. திடீரென்று இந்த அபிமானம் எங்கிருந்து வந்துவிட்டது?

இதில் புதைந்திருக்கும் சூழ்ச்சியை அறிவேன். காந்திஜீ உண்ணா நோன்புற்றால் பொது ஜனங்கட்கு அறம்பற்றி அவர் எவ்வளவு தியாகம் செய்கின்றாரென்பது தெரியும். ஆகவே அவர் கட்சி பலமடையும், ஆகவே உங்கள் கட்சி வலுக்குறையும் என்பதை நீங்கள் அறிவீர்கள். அதுதான் இந்தத் திடீர் இரக்கத்திற்கு முதற்காரணம். இரண்டாவது காந்திஜீ பட்டினி விரதம் ஆரம்பித்தால் மீண்டும் தீண்டாமையொழிப்புக் கிளர்ச்சிக்காரர்கள் புற்றீசல் போல் எழும்பி ஏற்கெனவே இருக்கும் நூறாயிரவரோடு சேர்வார்கள் என்பதையும் நீங்கள் அறிவீர்கள். மூன்றாவது உலகம் போற்றும் ஓர் உத்தமப் பெரியார்—64 வயதான கிழவர்—தபோ அக்கினியால் உடல் மெலிந்து ஆனால் காந்தியேறி இருக்கும் ஒருவர்—அறமே உருவெடுத்த அன்பினார்—தம் தள்ளாத காலத்தில் சத்தியமென்னும் கயிற்றில் உயிரைப் பிணைத்துக்கொண்டு உயிரை வாட்டித் தவம்புரிந்தால் அத்தபோ அக்னி உங்களுடைய சனாதன வைக்கோல் வேய்ந்த ஒதுக்கிடங்களைக் கணப்போதில் எரித்து விடுமென்பதும் ஆதலால் ஆதரவற்றுத் தவிப்பீர்களென்பதும் உங்கட்குத் தெரியும். ஆகவேதான் காந்திஜீயிடம் தந்தி ஸ்நேகம் பண்ணுகிறீர்கள். நீங்கள் கொடுத்ததைத் தந்தியென்று சொல்வதைப் பார்க்கினும் சூழ்ச்சி என்று சொல்வது பொருந்தும்.

இக்காரணம் பற்றி, நீங்கள் காந்திஜீ காசிக்கு வரும்போது விருந்து கொடுக்கலாம் என்று சொல்வதைப் பார்க்கும் போது வயிறெரிகிறது. நீங்கள் வீணாக விருந்துகொடுத்து ஏமாந்து போகாதீர்கள்.

அடுத்தபடியாகக் காந்திஜீயோடு வாதம் செய்யப் பார்க்கிறீர்களாம். எத்தனை வருடந்தான் வாதம் செய்வீர்களோ! உங்களைப் போல் ஆயிரக்கணக்கானவர் வாதம் செய்தாயிற்று; காந்திஜீயும் பதில் சொல்லியும் பத்திரிகைகளில் எழுதியும் பார்த்துவிட்டார். ஆதலால் நீங்கள் வாதத்தில் இறங்க வேண்டாம். பத்திரிகைகளைப் படித்துவிட்டு வாயை மூடிக்கொண்டிருப்பதுதான் உத்தமம்.

பகீரதன்.

---

ஆஜ்மீர் பண்டிதர்

ஐயா,

நீங்கள் அடிபட்டு விட்டதாக வருத்தப்படவேண்டாம். நீர் ஏதோ கொஞ்சநேரம் உடல் நலிந்தீரென்றால் அதன் பின் உமக்குக் கிடைத்திருக்கும் புகழ் அளவிடமுடியாததாகும். உமது நாமம் அடிபடாத பத்திரிகையும், உம்மை அறியாத மனிதருமில்லை. அதோடு காந்திஜீ விரதமாரம்பித்துவிட்டால் நீரே இந்தியர் பேச்சின் "சப்ஜெக்டாக" ஆகிவிடுவீர். எவ்வளவு பெரிய பாக்கியம்! எனக்குக்கூடக் காந்தி கட்சியைத் தாக்கிப் பேசி அடிபட்டால் நல்லதென்று தோற்றுகிறது. நீர் காந்திஜீ விரதத்தோடு சேர்ந்து ஆண்டவனிடம் பணியவோ, விரத மிருக்கவோ, அல்லது மனம் மாறித் தீண்டாமை யொழிப்புக்கு ஆதரவு காட்டிவிடவோ செய்துவிட்டால் ராமாயணத்தில் அனுமான் இடம் பெற்றது போலக் காந்தி புராணத்தில் நீர் இடம்பெற்று விடுவீர். உமது பாக்கியமே பாக்கியம்!

என உம்மைப் பார்த்துக்
கொட்டாவி விடும்
பகீரதன்

---

"காங்கிரஸ் வாலா"
c/o ஆசிரியர்,
மாட்டா.

சகோதரரே,

நீங்கள் மாட்டாப் பத்திரிகையில் "காந்திஜீ மிஸ்டர் மக்டொனல்டைப் போல எப்போதும் தேசத்தின் தலைமைப் பதவியைத் தாமே வகித்துக் கொள்ள ஆசைப்பட்டுக் கொண்டிருக்கின்றா" ரென்று எழுதியிருக்கிறீர்கள். உங்கள் எழுத்தைப் பார்த்தால் தலைமைப் பதவிக்கு நீங்கள் ஒரு தக்கார் போல் தோற்றுகிறது. அது போகட்டும்; காந்திஜீ எந்தெந்த ஸ்தபானத்தின் தலைவராயிருக்கிறார் என்று சொல்வீர்களா? காங்கிரசின் தலைவரா, ஹரிஜன

சேவக சங்கத்தின் தலைவரா, ஏதாவது மாகாண காங்கிரஸ் கமிட்டியின் தலைவரா அல்லது ஏதாவது சங்கங்களின் தலைவரா? அவர் நான் ஒரு பங்கி (தோட்டி) உழவன், நெசவுக்காரன், தேச ஊழியன் என்றுதான் சொல்கின்ருரேயல்லாமல்—நான் தலைவன் என்னை எப்போதும் தலைவனுக்குங்கள் என்று சொல்கிருரா? ஏதாவது கூட்டத்தில் தலைமை வகிக்க அழைத்தால் கூட வருகிருரா? அவரது உடம்பின் ஒவ்வொரு பகுதியும் உழைத்துழைத்து, தொண்டனுயிருந்து பணியாற்றிப் பணியாற்றியன்ருே பொழுது போக்குகின்றது? இந்த நிலைமையில் நீங்கள் தலைமைக் காசைப்படுகின்ருரென்ருல் அர்த்த மென்னவென்று புரியவில்லை. ஒருக்கால் தேசத்தில் பெருந்தலைவராகக் கொண்டாடப் படுகின்ருரென்ருல் அதற்கு அவரது, ஆற்றல், அனுபவம், தியாகம், உழைப்பு, அஞ்சாதிரம், சமயோசிதபுத்தி, நற்குணம், நல்லொழுக்கம், நேர்மை இவைகளே காரணம். இந்தப் பெருங்குணங்கள் அவரை இந்தியாவில் மட்டிலுமல்ல—உம்மிடையிலும் எம்மிடையிலு மட்டிலுமல்ல— உலகத்தினிடையிலேயே மாபெரும் தலைவராக்கிவிட்டது. ஹோம்ஸ், ரொமைன் ரோலண்டு, ஜார்ஜ் பர்னர்டு ஷா போன்றவர்களும் சர்வாதிகாரிகள் அனைவரும் அரசர்கள் எல்லோரும்—மக்டொனல்டுகூட—காந்திஜியை உத்த மோத்தமாகக் கொண்டாடுகிருர்கள். காங்கிரஸ் அது பற்றித்தான் அவரைச் சர்வாதிகாரியாக தேர்ந்தெடுத்தது; தேசத் தலைவர்களும் குருவாகவும் வழிகாட்டியாகவும் கொள்கின்றனர். இவ்வாறு கொள்வது அவருடைய வேண்டுதலல்ல. ஆகவே ஐயா, நீங்கள் உங்கள் கருத்தை வாபீஸ் வாங்கிக்கொண்டு தவறு சொன்ன பாதகத்திற்காகத் தலையில் "குட்டி"க்கொள்ளுங்கள்.

பகிரதன்.

---

வைதீக சிரேஷ்டர்கள்,

இந்தியா.

ஐயன்மீர்,

சிதம்பரம் (அண்ணமலை நகர்) அண்ணமலை பலகலைக் கழகத்திலிருக்கும் ஒரு பண்டிதர்—M. O. தாமஸ் என்னும் பெயரையுடையவர்— இந்தியாவில் எப்போது எழுத்துமுறை ஏற்பட்டதென்று ஆராய்ச்சி செய்து ஒரு கட்டுரை எழுதியுள்ளார். அதனைப் பார்த்தால் பாணினி காலத்துக்கு முன் சில நூற்ருண்டுகளில்தான் இந்தியர் எழுதும் முறையைக் கையாடலானுர்கள் என்றும், அதுவும் மேனுடுகளிலிருந்து கடன் வாங்கப்பட்டதுதானென்றும் கூறுகிருர். ஆனுல் பிரமா வென்பவர் உலகோற்பத்திகாலம் முதல் தலையிலெழுதி வருகிருர் என்று இந்திய மக்கள் தலைவிதி கடவுள் போட்ட புள்ளி, தலையிலெழுத்து என்றெல்லாம் கூறி வருகிருர்கள். இவற்றையெல்லாம் நோக்கும் போது எழுத்தேற்பட்ட காலத்தைப் பற்றி ஏதோ குழப்ப மேற்படுகின்றது. யாராவது வைதீகர்கள் தெளிவுபடுத்த முனைவார்களா ?

பகிரதன்.

---

முத்தம் போடுவது அபாயகரமானது.

—ஆரோக்கிய சாஸ்திரி.

ஆம் சிலகால் பல்கூட விழுந்து போமல்லவா ?





# ஸ்ரீமதி பிரிஜ்லால் நேரு ஆராய்ச்சி

---

## ஹரிஜன இயக்கத்தின் உண்மை என்ன?

---

### சனதனிகட்குச் சவுக்கு

---

ஸ்ரீமதி பிரிஜ்லால் நேரு அவர்கள் "ஸ்திரீ தர்மம்" என்ற பத்திரிகையில் அடியில் வருமாறு எழுதுகிருர்:—

ஹரிஜன் என்ற பெயர், ஜனகணிதத்தில் தாழ்த்தப்பட்ட வகுப்பினரென்றும், சாதாரணமாகத் தீண்டாதார் என்றும் அழைக்கப்படுகின்ற ஜாதியாருக்கு மகாத்மாவினுல் கொடுக்கப்பட்டதாகும். இப்பதத்தை உபயோகிப்பதில் பலவிதமான ஒழுங்கின்மை காணப்படுவதுண்டு. சாதாரணமாகத்தாழ்த்தப்பட்ட வகுப்பினரெல்லாம் ஹரிஜன் என்று அழைக்கப்பட்டு வருகிருர்கள். உண்மையில் அவர்களெல்லாம் தீண்டாதாரல்ல.

லோதியன் கமிட்டி யாதாஸ்து அடியில் வரும் இடையூறுகளினுல் வருந்துபவர்களைத்தான் தீண்டாதார் என்று சொல்லவேண்டு மென்கின்றது. அவ்விடையூறுகளாவன:—

சாதாரணமான ஹிந்து ஆலயங்களின் உள்ளே அனுமதிக்கப்படாதவர்கள்.

கொஞ்சத்தூரத்திற்குள் வந்தால் தீட்டாகிவிடுமென்று கருதப்படுகின்றவர்கள்.

இந்த மாதிரியான லோதியன் ரிப்போர்ட் இலக்கணத்தை எல்லா உத்தியோகஸ்த யாதாஸ்துக்காரர்களும் ஜனகணிதக்காரர்களும் பின்பற்றுவதில்லை. அவர்கள் தாழ்த்தப்பட்ட பல வகுப்பாரைச் சேர்த்துத் தீண்டாதார் என்று எழுதிவிடுகிருர்கள். ஆனுல் அவர்களெல்லாம் உண்மையில் தீண்டாதார்களல்ல.

#### ஜனகணிதக் குழப்பம்

ஆகவே யார் யார் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் யார் யார் அப்படியால்லர் என்பது சரியாகத்தெரியாது குழப்பமேற்படுவதுண்டு. சிலகால் ஜனகணித யாதாஸ்தில் தாழ்த்தப்பட்டவர் என்று குறிப்பிடப் பட்டிருப்பவர் உயர்ந்த ஜாதியார்களாகச் சமூகத்தால் கொள்ளப்படுகிருர்கள். இத்தகைய குழப்பம் வங்காளத்தில் அதிகம்.

மேலே சொன்ன குழப்பத்தால் இந்தியாவிலுள்ள தீண்டாதார் (ஹரிஜனர்) களின் தொகை பல மாதிரியாகக் குறிக்கப்படுகின்றது. 1919 ல் சௌத்பரோ கமிட்டி மொத்தம் 4 கோடி 20 லட்சம் பேரிருப்பதாகக் கூறியது. இரண்டு வருடங்கட்குப் பின்பு 1921 ல் அவர்களுடைய தொகை 4 கோடி 30 லட்சமாயிற்று. சமீபத்தில் லோதியன் கமிட்டி யாதாஸ்துக்காக சர்க்கார் எழுதிய ரிப்போர்ட்டில் 3 கோடி 75 லட்சமிருப்பதாகக் குறிக்கப்பட்டது. 1931 ம் வருட ஜனகணிதத்தில் 4 கோடி 3 லட்சமிருப்பதாகத்தெரிகிறது. மொத்தத்தில் அவர்கள் தொகை 5 கோடி 20 லட்சமாம்.



லிம்ப்டி சமஸ்தான இளவரசரும் இளவரசியும். சென்ற வாரம் இத்தாலியக் கப்பலில் லண்டனுக்குப் போனுர்கள். —S. P. B.

#### பற்பல வாதங்கள்

ஹரிஜனர்கள் ஹிந்துக்களிடையேயுள்ள ஓர் முக்கிய பகுதியாராவர். அவர்கள் எவ்வாறு தீண்டாதார்களாகக் கருதும்படியாயினர் என்பது இலேசாகச் சொல்லிவிடக் கூடிய விஷயமல்ல. பற்பலர் பற்பல காரணங்களைக் கூறுகின்றனர். ஆனுல் ஒன்றேனும் எல்லோராலும் ஒப்பப்படுவதில்லை. ஒரு சாரார் தீண்டாதார்களெல்லாம் பண்டைக்காலத்தில் இந்தியாவில் குடியிருந்த திராவிடர்களென்றும், ஆரியர்கள், மத்திய ஆஷியாவிலிருந்து வந்தபோது அவர்களால் கொள்ளையடித்து அடக்கியொடுக்கி வைக்கப்பட்டவரென்றும் சொல்கின்றனர். மற்ருெரு சாரார் தீண்டாமை சாரீர சாஸ்திர சம்பந்தமான தத்துவங்களால் ஏற்பட்டதாகுமென்றும், ஆபாசமான தொழில் செய்பவர்களைத்தான் தீண்டாதாராகக் கருதிவந்தனரென்றும் சொல்கின்றனர். இக்கொள்கையையெல்லாம் ஆராய்ச்சி செய்து பார்த்தால் சிறிதாவது உண்மையிருப்பதாகத் தெரியாது. தீண்டாதாரில் பலர் உடலமைப்பு, நிறம், பாஷை, முகத்தோற்றம் முதலியவற்றில் மற்ற இந்துக்களைப் போலவே காணப்படுகின்றனர். ஆதலால் அவர்கள் தனிப்பட்ட ஒரு வகுப்பை (வருக்கத்தை) ச்சேர்ந்தவர்களென்று சொல்லிவிட முடியாது.

பின் தொழில் பற்றி அவர்கள் தாழ்த்தப்பட்டார்களோ வென்றால் ஹரிஜனர்கள் செய்யும் தொழில்கள் பல. அவற்றில் எத்தனையோ மிகப்பரிசுத்தமானதும் ஆரோக்கியமானவைகளுமாகும். வேளாண்மை யாற்றுவதிலும், நெசவுத் தொழிலைப் பார்ப்பதிலும், பாய் செய்வதிலும், கூடைகள் கட்டுவதிலும், வண்டியோட்டுவதிலும், ரோடு, கட்டிடங்கள் முதலிவை அமைப்பதிலும் என்ன ஆபாசமிருக்கிறது?

### வைதீகர் கொள்கை.

வைதிக ஹிந்துக்கள் மத சம்பந்தமான தத்துவங்களால் ஏற்பட்டதாகும் தீண்டாமை என்கின்றனர். அவர்கள் இந்து மதத்தினர் நான்கு வர்ணமாகப் பகுக்கப்பட்டார்களென்றும், அவர்களைச் சேராமல் ஒரு ஜாதியார் புறம்பாக ஒதுக்கப்பட்டார்கள் என்றும் அத்தகையோர் பஞ்சமர்கள், அந்நியஜர்கள் என்று அழைக்கப்பட்டார்களென்றும், அவர்களே தீண்டாதார்களென்றும் சொல்கின்றார்கள். மேலும் அவர்கள் கருத்து வேதகாலத்தில்கூடத் தீண்டாதார் இருந்திருக்கின்றார்களென்பதும் ஆகவே இந்து மதம் பாதுகாக்கப்பட வேண்டுமானால் தீண்டாதார் இருந்தே தீரவேண்டுமென்பதும் ஆம். ஆனால் ஆன்மாக்களெல்லாமொன்று என்று முழங்கும் பகவத் கீதையை யுடைய மதம் அவ்வாறு ஒரு பேதத்தைக் காண்பிக்குமென்றால் நம்மால் நம்பமுடியாது. இந்து மதத்தில் நன்கு தேர்ச்சியுடைய எத்தனையோ பண்டிதர்கள் தீண்டாமை மதத்தின் அனுமதி பெற வில்லை என்கின்றார்கள். ஆதலால் தீண்டாமைக்கு வைதீகர் கூறும் காரணங்களும் ஏற்றுக் கொள்ளத் தகுந்தவைகளல்ல.

தீண்டாமை என்பது ஜாதிப் பாகுபாட்டின் விளைவுதான். இதனை யொழிக்கும் பொருட்டுப் புத்தபிரான் முதலிய பல ஞானிகளும் தத்துவ சாஸ்திரிகளும் முயன்றிருக்கிறார்கள். அவர்கள் கையாண்ட முறை ஆன்மாக்க ளெல்லாம் ஒன்று, மக்களெல்லாம் சகோதரர்கள் என்று போதனை செய்வதாகும். இந்தியச் சரித்திரத்தில் இது காறும் தீண்டாதார் உத்தாரணத்திற்குப் பாடுபட ஏற்பட்ட நல்ல அமைப்புக்களையோ, தாழ்த்தப்பட்டாரை உயர்ந்தவர்களோடு சேர்த்துக் கொள்ள முயற்சி செய்யப்பட்டதற்கான லட்சியங்களையோ காண முடியாது. ஆனால் நாற்பது வருடங்கட்கு முன்பு பஞ்சாபில் ஆர்ய சமாஜ ஸ்தாபகரான தயானந்தர் முதன் முதலில் முயன்றதாகக் காண்கிறோம். பின் மகரிஷி தயானந்தரைப் பின்பற்றிச் சுவாமி சிரத்தானந்தர், லாலாலஜபதிராய் முதலியவர்கள் பஞ்சாபிலும் ஐக்கிய மாகாணங்களிலும் உழைத்தார்கள். சில மகாராஷ்டிரத் தலைவர்களும் கடந்த 25 வருடங்களாக இதன் பொருட்டுப் பாடுபட்டதாகத் தெரிகிறது. எனினும் இப்போதுதான் இந்தியா முழுவதிலும் ஓர் பெரிய அளவில் தீண்டாமை யொழிக்க முயற்சி செய்யப்படுகிறது.

### மகாத்மா விரதம்

1932 செப்டம்பர் வகுப்புத் தீர்ப்பின் பிறகு மகாத்மா காந்தி உண்ணா விரதமிருந்ததைப் பார்த்துத்தான் அகில இந்திய ஹரிஜன சேவக சங்கம் ஸ்தாபனமாயிற்று. இச் சங்கம் முதலில் தீண்டாமை விலக்குச் சங்கமென்று அழைக்கப்பட்டு வந்து அப்பால் பெயரை மாற்றிக் கொண்டது.

மகாத்மாகாந்தி தீண்டாமை என்கின்ற முறை கேட்டினால் ஏற்படும் தீமையைச் சிறுகுழந்தைப் பருவம் முதலே உணர்ந்திருக்கிறார். அது முதல் தன்னளவில் தீண்டாமையை ஒழிக்க முயன்றுமிருக்கிறார். காங்கிரஸ் சில வருடங்கட்கு முன்பு தீண்டாமை யொழிப்புத் தீர்ப்பை மேற் கொண்டது மகாத்மாவின் முயற்சியால்தான். ஆனால் 1932 வரையிலும் தன் வாழ்க்கையின் உத்தேசம் என்று மேற்கொள்ளவில்லை. 1931ல் நடைபெற்ற வட்ட மேஜை மகா நாட்டில் தீண்டாதார்கட்குத் தனியான சீட்டுக்கொடுக்கவும் அதன் மூலம் அவர்களை இந்துக்களிடமிருந்து பிரித்துவிடவும் வழி தேடப்பட்டது. மகாத்மா காந்தி அம் முயற்சியை எதிர்த்து ஓர் பிரசங்கத்தில் "என் உயிரைக் கொடுத்தேனும் அத் தீர்மானத்தை உடைக்க முயல்வேன்" என்று பேசினார். அப்பால் முதன் மந்திரியின் வகுப்புத் தீர்ப்பில், தாழ்த்தப்பட்டாருக்குத் தனித் தொகுதி நல்கப்பட்டதும் காந்திஜீ உயிர் போகும்வரைப் பட்டினியிருந்து அதனை எதிர்த்தார்.

### ஒப்பந்தம்

அதன் பயனாக தாழ்த்தப்பட்டாருக்குக் கூட்டுத் தொகுதி நல்கி, சீட்டுகளும் ரிசர்வ் செய்து இந்துக்களும் தீண்டாதாரும் சேர்ந்து ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டார்கள். அதுபோது நடைபெற்ற ஒரு மாபெரும் கூட்டத்தில் மாளவ்யாஜி தலைமை வகிக்க ஹரிஜன சேவக சங்கம் முதன் முதலில் ஆரம்பிக்கப்பட்டது. இதன் தலைவர் திரு. ஜி. டி. பிர்லா; காரியதரிசி திரு. தாக்கர். இப்போது இதனால் எழுந்த 26 மாகாண போர்டுகள் ஒரு மத்திய போர்டின் கீழ் வேலை செய்துகொண்டிருக்கின்றன.

### வருத்தங்கள்

இவ்வரிஜன சேவக சங்கத்தின் வேலை இரட்டிப்பானதாகும். முதலாவது அது தீண்டாதாரைத் தொடுதல் பாவமென்று நாடு முழுதும் நினைக்கப்பட்டு வரும் அநியாயத்தையொழிக்கிறது. சென்னை, தீண்டாமையைப் பாராட்டுவதில் அதி முக்கியமானதாகும். அங்கு சில மூலைகளில் நெருங்காமை கூடவும் கையாளப் படுகிறதாம். சில பொது ரஸ்தாக்களை ஹரிஜனங்கட்கு அனுமதிப்பதில்லையாம். பொதுக் கிணறுகளில் தண்ணீர் எடுக்கச் சம்மதியாதிருப்பதும் பொதுக் கோவில்களில் நுழைய விடாதிருப்பதும் இந்தியா முழுமையும் பொதுவாகும். பொதுப் பாடசாலைகள் எங்கும் திறந்துவிடப்பட்டிருக்கின்றன. ஆனால் ஹரிஜனர்கட்குச் சில பொருளாதார, சமூகக் காரணங்களை முன்னிட்டு உள் நுழைய முடிவதில்லை. பஞ்சாபில் தீண்டாமைக் கொடுமை மிகக் குறைவாகவே இருக்கிறதென்று கருதப்படுகிறது. அம்மாகாணத்திற்கும் மற்ற மாகாணங்கட்கு முள்ள வித்தியாசம் தோட்டிகள் மட்டிலுந்தான் தீண்டாதாராகக் கருதப்படுகின்றார்களென்பதாம்.

ஹரிஜனர்கள் மிகத் தாழ்ந்தவர்களாகக் கருதப்பட்டு வந்தாலும் அவர்களிடையே பெரிய முனிவர் களிருந்திருந்ததாகத் தெரிகிறது. அம்முனிவர்கள் தம் மேலான தபோ நிலைமையால் மிக உயர்ந்தவர்களாகக் கருதப்பட்டனர்.

ஹரிஜன சேவக சங்கத்தின் இரண்டாவது வேலை ஹரிஜனங்களின் பொருளாதாரம், சமூக நிலை, கல்வி நிலை ஆகியவற்றைச் சீர்திருத்துவதாகும். மேனாட்டுப் படிப்பு நம் நாட்டில் பரவ ஆரம்பித்தது முதல் தீண்டாதாருக்கும் உயர் ஜாதியாருக்கு முள்ள வேற்றுமை



அதிகப்பட்டுவிட்டது. இவ்வாறு வேற்றுமை பெருகி மேல் ஜாதியாரோடுள்ள பழக்கம் குறைந்ததால் ஹரிஜனர்களின் முன்னேற்றம் பாதிக்கப்பட்டுப் போயிற்று. தீண்டாதார்களுக்குள் உயர்தரமான கல்வியாற்றலுள்ள டாக்டர் அம்பெட்கார், எம். சி. ராஜா ஆகியோர் சிலர் நீங்கலாகப் பெரும்பான்மையும் எல்லோரும் படிப்பற்றவரும் பணமற்றவரும் கட்குடித்தல், செத்தமாட்டு மாமிசமுண்ணல் போன்ற தீயகாரியங்களில் பழக்கமுடை யாருமாவர். ஹரிஜன சேவக சங்கம் இக்குறைபாடுகளை நீக்கப் பாடுபடுகிறது.

### சாதித்த காரியங்கள்

ஹரிஜன இயக்கத்தின் வயது ஒன்றரைதானாயிற்று. இதுவரையினும் அது சாதித்த காரியம் படிப்புக் கொடுப்பதாகும். 1932–33 ம் வருடத்தில் இந்தியாவில் சுமார் 500 பிரதம பாடசாலைகள் ஆரம்பிக்கப் பட்டிருக்கின்றன. இவைதன்றி உயர்தரப் படிப்புக்கு உபகாரச் சம்பளமும் கொடுக்கப்படுகிறது. புத்தகங்கள் இனாமாகக் கொடுக்கப்படுவதுமுண்டு.

தீண்டாமை யொழிப்பியக்கம் ராஜீய சம்பந்த முடையதல்ல. காந்திஜீயின் முறை மத சம்பந்தமுடைய தென்றும் நாம் மேனாளில் செய்த பாபங்களைத் தீர்க்கச்செய்யும் தவமென்றும் குறிப்பிட்டிருக்கிறார்.

இன்று எங்குமோர் உணர்ச்சி கிளப்பப்பட்டிருக்கிறது. புத்தியுடையவர்கள் தம் தவறையுணருகிறார்கள். இதுகாறும் நடந்து வரும் வேலையைக் கவனித்தால் சீக்கிரத்தில் தீண்டாமையோர் பழங் கதையாகி விடுமென்று சொல்லவிடமிருக்கிறது.

---

### தொழிலாளர்க்குப் பயிற்சி

ருஷ்யா, தொழிலாளர்க்குப் பயிற்சியளிப்பதே சிறந்த முன்னேற்ற வழியென்று நினைப்பதால் அதன் பொருட்டு 1937-ம் வருடத்திற்குள் 4 கோடி கிராமபோன்ரிக்கார்டுகளை அமைக்கத் தீர்மானித்திருக்கிறது. இதுகாறும் ருஷ்யர்கள் கிராமபோனை ஒரு ஆடம்பரப் பொருள் என்றும ரேடியோவே உபயோகமான தென்றும் கருதி வந்தார்கள். ஆதலால் இதுகாறும் அவர்களிடம் ரிக்கார்டு "பிரஸ்" செய்வதற்கான உலோகப் பொருட்களோ இருந்ததில்லை. இன்று, கிராமபோன் ரிக்கார்டு செய்வது இரண்டாவது ஐந்து வருடத் திட்டத்தின் ஒரு பகுதி யாகிவிட்டது. ருஷ்யாவில் ருஷ்ய பாஷை தெரியாதவர்கள் 169 பேர்களிருக்கின்றார்களாம். அவர்களுடையவும் தேசிய கீதம், நர்த்தனம் இதர பாட்டுகள் ஆகியவற்றை ரிக்கார்டு செய்யப் போகிறார்களாம்.

---

ஆசிரியர் :—எங்கு உன்னால் ஏராளமான பணத்தைப் பார்க்க முடியும் ?

மாணவன்:—கணக்கு நோட்டில் சார்.

### ஊழியன் சந்தா.

| | | |
|---|---|---|
| உள்நாடு வருடச் சந்தா | ரூ | 6–0–0 |
| ,, ஆறு மாதங்கட்கு | ,, | 3–0–0 |
| வெளிநாடு வருடச் சந்தா | ,, | 10–0–0 |
| ,, ஆறு மாதங்கட்கு | ,, | 5–0–0 |

காரியஸ்தர்,
ஊழியன் ஆபீஸ்,
56, தம்புசெட்டித் தெரு,
சென்னை.



பம்பாய் மாகாணக் காங்கிரஸ் கமிட்டியின் பொக்கிஷதாரர் திரு. ஆர். கிருஷ்ண ஐயர் வேலையை விட்டுப் போகையில் உபசாரக் கூட்டம் நடத்தப்பட்டது. படத்தில் இடது பக்க மிருந்து நான்காவதாக திரு. கிருஷ்ண ஐயர் நிற்கிறார். —S.P.B.

# செய்தித் திரட்டு

### சர்தார் படேல் விடுதலை

ஜுலை 14-ந் தேதி சர்தார் வல்லபாய் படேல் பூனு சிறையிலிருந்து விடுதலையானார்.

### வைசிராய் பூகம்ப நிதிக்கு நன்கொடை

வைசிராய் பீஹார் பூகம்ப கஷ்ட நிவாரண நிதிக்குப் போலந்து சர்க்கார் 2500 ரூபாய் நன்கொடை யளித்திருக்கிறார்கள்.

### வலது பக்கம் இருதயம்

பாடியாலாவில் ஒரு நோயாளியை எக்ஸ்ரே மூலம் பரிசோதனை செய்து பார்த்தபோது இருதயம் வலது பக்கத்திலிருப்பதாகத் தெரிந்தது.

### ஹரிஜன் நிதிக்கு 6 லட்சம்

மகாத்மா காந்தி ஹரிஜன நிதி வசூலுக்காகப் புறப்பட்டதின்பின் ஜுலை 14-ந் தேதி வரையிலும் வசூலான தொகை 6 லட்சத்து 9 ஆயிரமென்று தெரிகிறது.

### கவிதாகூர் பிரயாணம்

கவிதாகூர் செப்டம்பர் மாதத்தில் பாலஸ்தீனத்திற்குப் போகப் போகிறார். அங்கு கிராமப் புனருத்தாரண வேலை எவ்வாறு நடைபெறுகின்றதென்று பார்ப்பாராம்.

### நவஜவான் சபைமீது தடை நீக்கம்

ஜுபல்பூரிலுள்ள நவஜுவான் பாரத சபை தேசிய சாரணர் சங்கம் என்பவைகளின் மீதும் சந்தவாவிலுள்ள வாலிபர் சங்கத்தின் மீதும் விதிக்கப்பட்டிருந்த தடை யுத்திரவு 11-ந் தேதி முதல் நீக்கப்பட்டிருக்கிறது.

### வேலையில்லாததால் தற்கொலை

ராயப்பேட்டை டாக்டர் தோட்டக் குளத்தில் 20 வயதுள்ள கண்ணன் என்பவரின் சரீரம் கிடந்தது. அவர் வேலையில்லாத் திண்டாட்டத்தால் உழன்று அதனால் உயிரைவிட்டிருக்க வேண்டுமென்று ஜுரிகள் முடிவு கூறினர்.

### சர்வ மத காங்கிரஸ்

சிகாகோவில் சமீபத்தில், பரோடா ராஜாவின் தலைமையில் நடைபெற்ற சர்வமத காங்கிரசில் இந்தியப் பிரதிநிதியாய்ச் சென்றிருந்த திரு. பிரேக் வந்துவிட்டார். அவர் எல்லா மத்தினிடையிலும் அன்பும் ஒத்துழைப்புமேற்பட வேண்டுமென்பதுதான் மகாநாட்டின் அந்தரங்கக் கருத்து என்று கூறினர்.

### 16 மணி நேரம் மிருகப் போர்

டொர இஸ்மேல்கான் செய்தி யொன்றினுல் ஒரு காட்டுப் பன்றியும் ஒரு புலியும் 16 மணி நேரம் விடாது சண்டை செய்தன வென்றும் காலையில் ஆரம்பமான சண்டை இரவு நெடுநேரம் வரை நடைபெற்றுக் கொண்டிருந்து இறுதியில் பன்றி தோற்றுப்போக புலியிருந்த களைப்படைந்து ஒரு புதருக்குள் போய் படுத்துக் கொண்டதென்றும் தெரிகிறது.

### வில்லிங்டனை பதவியிலிருந்து நீக்க யோசனை

கன்சர்வேடிவ் பிரதிநிதிக் கோஷ்டிகங்களுக்கு அனுப்பியுள்ள விவரங்களைக் கொண்டு பிற்போக்காளர் லார்டு வில்லிங்டனை வைசிராய் பதவியிலிருந்து நீக்கி விடுமாறு மந்திரி சபையை வற்புறுத்துவரென்றும், மந்திரி சபை அதற்கிணங்காவிடில் தங்களுக்குக் கிடைத்துள்ள விவரங்களை வெளியிட்டுவிடப் போவதாகப் பயமுறுத்துவரென்றும் "டெய்லி ஸன்" பத்திரிகை செய்தியிலிருந்து தெரிகிறது.

### சுயராஜ்ய பவனத்தில் கொடியேற்று விழா

அலகாபாத் சுயராஜ்ய பவனத்தின் மீது பறந்து கொண்டிருந்த யூனியன் ஜாக் அப்புறப்படுத்தப்பட்டது. காங்கிரஸ் தேசியக் கொடியை அதில் பறக்கவிட உத்தேசித்திருக்கிறார்கள். கொடியேற்றுவிழா நடைபெறும் தேதி அதி சீக்கிரத்தில் விளக்கப்படும். ஜுலை 22-ந் தேதி மகாத்மா காந்தி அங்கு வந்து $2\frac{1}{2}$ மணி நேரம் தங்கப் போவதால் பெரும்பான்மையும் அடிகளே கொடியேற்று விழா ஆற்றலாம்.

### தேசீய ஒற்றுமைக்குச் சாதனங்கள்

மதனப்பள்ளி ஹிந்தி பிரேம மண்டலத்தின் ஆதரவில் நடைபெற்ற ஒரு பொதுக் கூட்டத்தில் ஸ்ரீமதி மார்கரட் கஸின்ஸ் கூறியதாவது:—

ஹிந்தியை விரும்புவது சுயேச்சை இந்தியாவை விரும்புதற் கொப்பாகும். தேசத்திற்கு ஓர் பொதுப் பாஷை மிகவும் தேவை யென்பது சரித்திரம் தெரிவிக்கு முண்மை. அதேமாதிரி சங்கீதத்திற்கும் ஓர் அரிய சக்தியுண்டு. தேசீய கீதம் ஒற்றுமையை நிலைநாட்டுகிறது. பிரான்ஸ் அமெரிக்க, அயர்லாந்து, ருஷியாவாகிய நாடுகளில் தேசீய கீதம் பெரிய ஒற்றுமைக்கு வித்தா யிருக்கிறது. சங்கீதம் மூலம் ஹிந்திப் பிரசாரம் செய்வது நம் நாட்டில் மிகவும் எளிது.

### ஜப்பானில் வெள்ளக் கொடுமை

ஜப்பானில் கடுமையான மழை பெய்ததால் ஏராளமான நஷ்டமேற்பட்டிருக்கிறது. ஒரு நாளையில் சுமார் அறுபது மனிதர்களும், கால் நடைகள் பலவும், அநேக வீடுகளும் அழிந்து விட்டதாகத் தெரிகிறது. இஷிகாவாப் பிரதேசத்திலுள்ள கடற் கரையில் வெள்ளம் மிகவும் அதிகமா யிருப்பதால் பல வீடுகள் அழிந்து போயிருக்கின்றன வென்றும் சாமான்களும் பிணங்களும் அல்லோல கல்லோலமாய்க் கிடப்பதைப் பார்த்துச் சகிக்க முடியவில்லை யென்றும் கூறப்படுகிறது. சுமார் 20 ஆயிரம் வீடுகள் முழுகிப் போய் விட்டனவாம்.

### பேர்லின் நகரத்தில்

ஒரு மனிதன் விரைவாக ஒரு ஹோட்டலுக்குள் வந்து சாப்பிட்டுவிட்டு விரைவாக வெளியே போய்விட்டான். பணம் கொடாது போவதைக் கண்ட கடைக்காரன் பின்னுடிச் சென்று அவன் சட்டையைப்பற்றி இழுத்தான். சாப்பிட்டவன் ஓர் ஏழை; அவன் கையில் பணமோ காசோவில்லை. ஆதலால் பல்லையெலாம் காட்டுவிட்டுக் கையிலிருந்த ஒரு லாட்டரி டிக்கட்டைக் கொடுத்தான். அந்த டிக்கட்டோடு கடைக்கு வந்த வியாபாரி மறுநாள் காலையில் அந்த டிக்கட்டின் பேரால் 400 பவுன் பரிசு கிடைத்ததாகக் கண்டான். உண்மையான டிக்கட் சொந்தக்காரனுக்கு ஒன்றும் கிடைக்கவில்லை. அதாவது அவன் லாட்டரி தீர்ந்தபாடில்லை.



# மார்க்கஸ் ஸிஸரோ

அல்லது

# உலகம் போற்றும் உரோமானிய நாவலன்

(திரு. கே. வீ. எஸ். வாஸ்)

சுமார் இரண்டாயிரத்து இருபது ஆண்டுகளுக்கு முன் ஜனவரி மாதம் மூன்றாந் தேதி ஒல்ஷியன் மலையடிவாரத்திலுள்ள ஆர்ப்பீனம் என்னும் நகரத்தில் மார்க்கஸ் ஸிஸரோ பிறந்தார். அவரது அன்னையான "ஹெல்வியா" என்னும் மாது ஓர் தனவந்தனின் பெண். ஸிஸரோவின் தந்தை தாழ்குடிப் பிறந்த ஓர் தொழிலாளியென்று சிலர் அபிப்பிராயப்படுகின்றனர். சில சரித்திர ஆராய்ச்சியாளர்கள் ஸிஸரோவின் தகப்பனார் ராஜீய விஷயங்களில் தலையிட்டுக் கொள்ளாதிருப்பினும் ஒல்ஷியன் அரசாங்கத்துப் பண்டை மன்னர்களின் சந்ததியிற் பிறந்தவரென்று கூறுகின்றனர்.

பால்யத்தில் ஸிஸரோவின் புத்தி நுட்பத்தையும் விடா முயற்சியையும் கண்டு சந்தோஷம் கொண்ட அவரது தந்தை ஸிஸரோவின் கல்வி யபிவிருத்திக்கு வேண்டிய சகல முயற்சிகளையும் எடுத்துக் கொள்ளலானர். ரோமாபுரியில் வசித்துவந்த அகூலியோ வென்னும் அவரது மாமன் வீட்டிற்கு ஸிஸரோவும், ஸிஸரோவின் சகோதரன் க்வின்டஸும் கல்வி கற்பதற்காக அனுப்பப்பட்டனர். ஸிஸரோ தனது சாமர்த்தியத்தினாலும், எவரிடமும் அன்பாய்ப் பேசும் சுபாவத்தினாலும் உபாத்தியாயர்களின் பிரியத்தையும் மாணவர்களின் நட்பையும் பூர்ணமாய்ப் பெற்றார். வாலிபர்கள் படிக்க வேண்டிய பாடங்கள் யாவற்றையும் ஒருவாறு தனது பதினேழாம் ஆண்டில் முடித்துக் கொண்டு 'ஸ்கவோலா' வென்னும் வக்கீலிடம் சட்டங்களைப் படிக்கத் தொடங்கினர். அவருடன் நியாய ஸ்தலங்களுக்குச் சென்று அவருடைய வாதங்களைக் கூர்ந்து கவனிப்பதும், ஒழிந்த நேரங்களில் டெமஸ்தனீஸ் போன்ற நாவலர்களின் பிரசங்கங்களைப் படிப்பதும், டயர்டோடஸ், ஈஸாப், ரோஷியஸ் முதலியவர்களின் தத்துவ நூற்களில் தன்னையே மறந்து ஆழ்ந்திருப்பதுமாய்க் காலங் கடத்தி வருகையில் ஸ்கவோலா திடீரென மாணமடைய "பைலோ" வென்னும் ஞானியிடம் தத்துவ சாஸ்திரங்களைப் படிக்கத் தொடங்கினர். இத்துடன் 'ஸில்லா' என்னும் தளகர்த்தருக் கடியில் இராணுவப்



முதலாவது பாரிஸ்டர் ராஜகுமாரன்: ராஜகுமாரர் மானசிங் பங்கா என்ற இவர் தான் சுதேச சமஸ்தான ராஜகுமாரர்கட்குள் முதன் முதலில் பாரிஸ்டர் பட்டம் பெற்றவர். —S.P.B.

பயிற்சியும் சிறிது காலம் செய்துவந்தார். இப்படியாக உரோம நாவலனுக்கு வேண்டிய சகல கல்வியையும் பயின்று கோர்ட்டுகளில் வாதம் செய்யத் தொடங்கினர்.

தந்தையைக் கொலை செய்ததாகக் குற்றம் சாட்டப்பட்டு விசாரணைக்குக் கொண்டுவரப்பட்ட செக்ஸ்டஸ் ரோஷியஸ் என்பவனுக்கு வக்காலத்துப் பெற்றுக் கொண்டு பேசியதே ஸிஸரோவின் முதல் வாதமாகும். ரோஷியஸ் குற்றமற்றவன்; எதிரிகள் சூழ்ச்சியே அவனை நீதிபதியின் முன் கொணர்ந்தது. நன்றாகப் பேசி வழக்காடுவோரில்லையென்றால் உரோமானியக் கோர்ட்டுகளில் வெற்றி பெறுவது ஏலாது. சிசரோ அப்பணியை திருப்தியாக முடித்துவிட்டார்.

ஸிஸரோவின் அடுத்த இரண்டு வருடங்கள் யாத்திரையில் கழிந்தன. மீண்டு வந்ததும் ஸிஸிலி நாட்டிற்குக் கவர்னராக நியமிக்கப்பட்டு அத்தேசத்தை யடைந்தார். ஸிஸரோ தனது நன்னடக்கையால் அதுவரையில் ஸிஸிலியில் கவர்னர்பதவியை வகித்து ஆண்டு வந்த ஏனைய உரோமானியர்களைக் காட்டிலும் ஜனங்களின் அன்பையும் நன்மதிப்பையும் பெற்றார். அவரது ஆட்சியில் திடீரென உரோமாபுரியில் பயங்கரமானதோர் பஞ்சம் உண்டாயிற்று. பல உரோமானியர்கள் உணவின்றி மாண்டனர். இந்தச் சந்தர்ப்பத்தில் ஸிஸரோ ஸிஸிலி நாட்டினின்று ஏராளமான தானியங்களை யனுப்பி வல்லமையுடன் உரோமாபுரியைப் பஞ்சத்தினின்றும் விடுவித்தார்.

சிசரோ சில வருடங்கள் கவர்னரா யிருந்துவிட்டுத் திரும்பியதும் அவருக்கு முன் ஸிஸிலித் தீவில் கவர்னராக விருந்த 'வியர்ஸ்' என்பவர்மீது ராஜத் துரோகக் குற்றம் சாட்டப்பட்டு விசாரணைக்கு வந்தது. வியர்ஸ் காலத்தில் ஸிஸிலி பஞ்சத்தாலும், உள்நாட்டுச் சண்டைகளாலும், களவு கொலைகளாலும் மிகக் கஷ்டப்பட்டதெனக் கூறப்படுகிறது. அவன் ஜனங்களை வருத்திப் பகிரங்கமாய்க் கொள்ளையடித்ததின் பயனாக நாடே க்ஷீணித்து விட்டது. வியர்ஸ் குற்றம் சாட்டப்பட்டு விசாரணை செய்யப்படுகையில் உரோமாபுரியிலுள்ள பல பிரபலஸ்தர்கள் அவனுக்குச்சாதகமாக வாதித்தனர். ஆனால், அவனால் கஷ்டப்பட்ட பல ஸிஸிலியன் குடும்பத்தினர் ஸிஸரோவைத் தங்களுக்காக வாதிக்கும்படி கேட்டுக் கொள்ள ஸிஸரோவும் ஒப்புக்கொண்டு முன் வந்தார். அன்று சிசரோ பேசிய பேச்சுப் பொன்போல் போற்றப்பட்டது. அவருடைய பேச்சு வன்மை

யால் எதிரிகளும்கூட மதிமருண்டு வியர்சைத் தண்டித்து விட்டனர்.

வியர்ஸ் தண்டிக்கப்பட்டதும் ஸிஸரோவின் புகழ் நாடெங்கும் அதிகமாகப் பரவியது. அவர் "நியாயசபைக்கரசன்" என்ற பட்டத்தைப் பெற்ருர். அவருடைய இனிய குரலோசையும், பொறுக்கியெடுத்த வார்த்தைகளுமே அவாது ஜயத்திற்குக் காரணம்.

உரோமானியக்குடியாசுக்கு வருடா வருடம் "கான்ஸல்ஸ்" (Consuls) என்ற பெயருடன் இருவர் பொதுஜனங்களால் தேர்ந்தெடுக்கப் படுவது வழக்கம். இவர்களே அவ் வருஷம் முழுதும் குடியாசுக்குத் தலைவர்களாவர். உரோமானியன் தன் வாழ்நாளில் அடையக்கூடிய கௌரவப் பதவிகளில் முதன்மையானதிதுவே. ஸிஸரோ தன் யௌவனப் பருவத்திலேயே இரண்டு கான்ஸல்களுள் ஒருவராக ஜனங்களால் ஏகமனதுடன் தேர்ந்தெடுக்கப் பட்டார். இவருடன் கான்ஸல் பதவிக்கு நின்று தோல்வியுற்ற வர்களில் முக்கியமாக "காடலின்" என்பவரின் பெயர் குறிப்பிடத்தக்கது. காடலின் வஞ்சகமே உருவெடுத்தாற்போன்றவன். அவனது விருப்பம் யாதெனில் உரோமாபுரியைத் தன் பூர்ண சுயாதீனத்திற்கு உட்படுத்திக் கொள்ளவேண்டுமென்பதாகும். இதன் பொருட்டு அவன் செய்த சூழ்ச்சிகள் பல. பணத்தைக் கொடுத்தும் காமிகளுக்குக் காரிகைகளை யளித்தும் பலமுரடர்களைத் தன் வசப்படுத்திக்கொண்டும் உரோமபுரியைத்தாக்கச் சமயம்பார்த்துக்கொண்டிருந்தான். முதலாவதாக இரண்டு கான்ஸல்களையும் கொலை செய்துவிட்டு ஸெனேட் அங்கத்தினர்களைப் பின் கைதுசெய்து விடவேண்டும் என்பதே அவனது எண்ணம். ஆனால் முதல்காரியம் இரண்டு மூன்று முறை முயலப்பட்டு வெற்றிபெறவில்லை. ஸிஸரோ கான்ஸல் பதவியை முன்னிட்டு அரங்கமேடையின் மீதேறிப் பிரசங்கம் செய்கையில் திடீரென அவர் மீது பாய்ந்து கொலை செய்து விடுவதென்ற தீர்மானத்துடன் சில புரட்சிக்காரர்கள் அங்கு வந்திருந்தனர். இதை முன்னதாகவே யறிந்த ஸிஸரோ தலை முதல் கால்வரையில் இரும்புக் கவசம் தரித்து மேலே அதை மறைத்துப் பட்டாடையுடுத்திக்கொண்டு வந்து விட்டதுமன்றி தன் பிரசங்கத்தில், குறிப்பிட்டும் விட்டார்.

இவ்வாறே இரண்டு மூன்று முறை ஸிஸரோவின் மீது வலை வீசப்பட்டது. ஆனால் தந்திரமாய் ஸிஸரோ அவைகள் எல்லாவற்றினின்றும் தப்பினார். கடைசியில் தங்கள் இருவருள் ஒருவர் மாண்டாலன்றி நாட்டில் அமைதியிராது என்றே ஸிஸரோவும், காடலினும் நம்பினர். காடலின் பகிரங்கமாகவே இதாலி, ஸ்பெயின் முதலிய தேசங்களில் தனக்கு ஓர் பெரிய சைனியத்தைச் சேர்க்கத் தலைப்பட்டான். அவனுடைய அட்டகாசம் அதிகரிக்கவே உரோமாபுரி ஒவ்வோர் நிமிடமும் மிக்க அபாயகரமான நிலையிலிருப்பதை யுணர்ந்து ஸிஸரோ உடன் செனட் சபையைக்கூட்டி அங்கிருந்த காடலினையும் பகிரங்கமாகக் குற்றவாளி யென ஸிஸரோ கூற காடலின்ஸெனேட்டை விட்டு, உடனே வெளியேறிப் பகைவர்களின் கூட்டத்திற்போய்க் கலந்து கொண்டான். லெண்டுலஸ்,ஸிதிகஸ் என்னும் இரு ரோமானியர்களைத் தேசத்துரோகிகள் என்று முன் விசாரணையில்லாமலே ஸிஸரோ தூக்கிவிடும்படி உத்திரவிட்டார். காடலினின் சைனியம்சின்னபின்னப் படுத்தப்பட்டது. ஸிஸரோவிற்கு உரோமாபுரியைக் காத்த உத்தம வீரன் என்று பட்டமும் அளிக்கப்பட்டது.

ராவ் பஹதூர் டாக்டர் T. S. திருமூர்த்தி. இவர் விசாகப்பட்டணம் வைத்தியக் கல்லூரியில் பிரின்ஸிபாலாக நியமிக்கப் பட்டிருக்கிருர். P. P. B.

இத்துடன் காடலின் நின்று விடவில்லை. அரை குறை ஆயுதபாணிகளாய் ஆருயிரம் ஆட்களுடன் காடலின் பிஸ்டோஜா நகரத்தினருகில் அந்தோனி என்னும் இரண்டாவது கான்ஸலுடன் போர் புரிந்து மாணத்தருவாயில் போர் முனையில் வீரனுகவே மாண்டான். இவ் வருஷத்துடன் ஸிஸரோவின் கான்ஸல் உத்யோக நிர்வாகமும் முடிந்து புகழுடன் வீடு திரும்பினுர்.

இவருடைய இல்லற வாழ்க்கையைப் பற்றிச் சற்றுக் கவனிப்போம். தனது நாற்பதாம் ஆண்டில் நாட்டில்சிறந்த தனவந்தர்களுள் ஸிஸரோவும் ஒருவரானுர். 30,000 பவுன்மதிப்புள்ள இவரது மாளிகையின் எழிலைப்பற்றிப்பலர் புகழ்ந்து கூறியிருக்கின்றனர். இதைத் தவிர தேசத்தின் பல விடங்களிலும் ஸிஸரோவிற்கு உன்னதமான மாளிகைகளிருந்திருக்கின்றன. இவரது வீடுகளில் எங்கு நோக்கினும் ஒரே புஸ்தகமயமாயிருக்கும். "புஸ்தகமில்லா வீடு ஆன்மா இல்லா சரீரம் போன்றது" என்று ஸிஸரோ பல சமயங்களில் கூறியிருக்கிருர். பழைய புத்தகங்களைக் காப்பி செய்வதற்குப் பல கிரேக்க அடிமைகளை வைத்து ஆதரித்து வந்தாராம். சிற்பங்களில் ஸிஸரோவிற்கு அவ்வளவு விருப்பம் கிடையாது. பழைய புஸ்தகங்கள், கிழிந்த புராதன ஏடுகள் எங்கேயிருப்பினும் அவற்றை விலை கொடுத்து வாங்கி வந்து தன் புத்தக சாலையில் வைக்கும் வரையில் இவருக்குச் சரியாக உறக்கம் வாராதாம். நகர வாழ்க்கையைவிடக் கிராம வாழ்க்கையையேஸிஸரோபெரும்பாலும் விரும்பினுர். அங்கே மனதிற்கு அமைதியுண்டென்பது அவாது பூர்ண நம்பிக்கை.

மனைவியும் புருடனும் ஒருவரையொருவர் வெகு அன்பாகவே நேசித்து வந்தனர். 'துலியா' என்னும் தன் பெண் குழந்தையிடம் ஸிஸரோவிற்கிருந்த பிரியம் கொஞ்சமல்ல. அவாது கடிதங்களிலெல்லாம் துலியாவைப் பற்றி ஏதாவது எழுதப்படாமலிராது. ஸிஸரோ கான்ஸல் பதவியை வகிப்பதற்கு ஓர் ஆண்டு முன்னர் (அவளது பதின் மூன்ரும் ஆண்டில்) மணம் செய்விக்கப்பட்டு சில வருடங்கள் பால்யப் பருவத்திலேயே உயிர் நீத்தாள். இத் துக்க சம்பவம் ஸிஸரோவை மிகவும் வருத்தியது. வெகு காலத்திற்குப்பின் ஸிஸரோவிற்கு மார்க்கஸ் என்னும் ஓர் புதல்வன் பிறந்த



பின்பே அவாது பெண் சோகம் ஒருவாறு நீங்கிய தென்னலாம்.

ஸிஸரோ இப் புதல்வன் மீது எல்லையற்ற அன்பைக் காட்டி வந்தார்; ஆனுல் அவன் துஷ்ட சகவாசத்தால் தந்தைக்குப் பல தீமைகளை இழைத்து மாண்டான்.

சிசரோவுக்கு மனைவியின் சீதனமாகவும் வாரிசின்றி இறந்த நண்பர்களின் கொடையாகவும் சிற்றரசர்கள் பரிசாகவும் 1 லட்சத்து 70 ஆயிரம் பவுனுக்கு ஆஸ்தி கிடைத்தது.

ஒரு தரம் பப்ளியஸ் கிளாடியஸ் என்ற உரோமானியன் பெண்ணுடை தரித்து இரகசியமாய் சம்பாஷித்துக் கொண்டிருந்ததாகக் குற்றம் சாட்டப்பட்டு விசாரணை செய்யப்பட்டான். அவனது நண்பர்கள் ஜூரர்களுக்கு ஏராளமாக இலஞ்சம் கொடுத்து உண்மையை மறைப்பதற்கான உபாயங்களைச் செய்யலாயினர். இந்தச் சந்தர்ப்பத்தில் ஸிஸரோ க்ளாடியஸுக்கு எதிரிடையாக வாதம் செய்யவும் க்ளாடியஸ் ஸிஸரோவின் மீது வஞ்சம் தீர்த்துக்கொள்ளச் சபதம் செய்து கொண்டான். அவன் மூர்க்கத்தனமாகத் தனக்குத் தீங்குகளிழைப்பான் எனப் பயந்து கொண்டிருக்கையில் மறுவருடம் அவன் நகர நீதிபதிகளிலொருவனுகத் தேர்ந்தெடுக்கப்படவே ஸிஸரோவின் பயம் அதிகமாயிற்று. க்ளாடியஸ் அதே வருடம் "எவனொருவன் உரோமானியன் ஒருவனை விசாரணையின்றிக் கொலை செய்கிருனே அவனை உடனே தேசப்ரஷ்டம் செய்ய வேண்டும்" என்ற சட்டத்தையும் நிறைவேற்றி ஸிஸரோ கான்ஸலாகவிருந்த காலத்தில் தேசத்துரோகம் செய்ததாகக் குற்றம் சாட்டி அதனை செனட் சபைக்குக் கொணர்ந்து தன் நண்பர்களுதவியால் வெற்றியாக முடித்துக்கொண்டான். அதன்படி அவர் தேசப்பிரஷ்டம் செய்யப்பட்டார். ஆனுல் வெகுநாட்கள் ஸிஸரோ நாட்டிற்கு வெளியிலிருக்கவில்லை. மறு வருடமே ஸிஸரோ உரோமாபுரிக்கு அழைக்கப்பட்டுத் திரும்பி வந்து சேர்ந்தார். ஜனங்களும் ஆரவாரத்துடன் அவரை எதிர்கொண்டு வரவேற்றனர். பறிமுதல் செய்யப்பட்டுத் தீயிடப்பட்ட அவாது மாளிகைக்குப் பதிலாகப் புதிய மாளிகை யொன்றை அரசாங்கப் பணத்தில் கட்டிக் கொடுக்கவும் ஸெசனட் சபை அநுமதி யளித்தது. ஸிஸரோ மறுபடி தன் வக்கீல் தொழிலை நடத்தலானுர்.

'கிழப் பருவம்' என்ற நூல் ஸிஸரோவால் இப்பொழுதுதான் எழுதப்பட்டதாம். இரண்டாவது கட்டுரையான "நட்பு" என்பதும் இச் சந்தர்ப்பத்தில் எழுதப்பட்டதே.

மனிதனின் கடமைகளைப்பற்றி ஸிஸரோ வரைந்துள்ள நூலில் பிரதானமாக ஒவ்வோர் மானிடனும் கவனிக்கவேண்டுவது பொய் புகலாமை, ஞாய மார்க்கத்தினின்று பிறழாமை, விபசாரம், சூது, வஞ்சகம், குடி இவைகளைக் கைகொள்ளாமை முதலியன.

மைஞர் சர்வகலாசாலையில் ரணசிகிச்சைக்காகப் பதக்கம் பெற்ற திரு. B. K. ராமகிருஷ்ண ராவ் B. Sc. M.B. B. & S. உயர்தரப் படிப்பிற்காகச் சென்ற வாரம் இங்கிலாந்துக்குச் சென்ருர். —S. P. B.

ஸிஸரோவின் மதத்தைப்பற்றி நாம் எவ்வித அபிப்பிராயமும் திண்ணமாய்க் கூறவியலாது. கடவுளைப்பற்றிக் கூறுகையிலெல்லாம் பிற மதத்தினர்களின் அபிப்பிராயங்களையும் மற்ற ஞானிகளின் அபிப்பிராயங்களையு மெடுத்துரைக்கின்ருரேயன்றித் தனது சொந்த அபிப்பிராயத்தை நழுவவிட்டு விடுகின்ருர். கடவுளைப் பற்றி எவ்வளவுக் கெவ்வளவு சிந்தனை செய்கின்ருேமோ அவ்வளவுக் கவ்வளவு அவாது விஷயங்கள் சிக்கலாகின்றன என்பது அவர் கருத்து.

ஸிஸரோவின் அந்திய வாழ்க்கையில் சீசர் என்ற ஓர் எதிரி கிளம்பினுர். அவரோடு பகைத்துக்கொண்டு சீசரோ உரோமாபுரியைக் கைவசப்படுத்த முயன்ருர். அதுபோது அந்தோனி என்ற ஒருவன் எழும்பி சீசருக்கு உதவி யளித்தான். சீசரோ ஜனங்கட்குக் கெட்ட எண்ணத்தை உற்பத்தி செய்து அந்தோனியைத் துரத்தினுர்.

ஆனுல் சில தினங்கட்குள் ஸீஸர் ஆக்டேவியானஸ், அந்தோனி மூவருக்கும் ஓர் உடன்படிக்கை யேற்பட்டு அதன்படி உரோம ராஜ்யத்தைத் தங்கள் ஆளுகைக்குள் கொணர்ந்து மூவரும் சரிச்சமமா யனுபவிப்பதெனத் தீர்மானித்தனர். இதனுல் ஸிஸரோ அந்தோனியின் பலம் அதிகரித்து விட்டதால் தன்மீது வஞ்சம் தீராமலிரான் என்பதை நன்குணர்ந்து தற்கொலை செய்துகொள்ள முதலில் எண்ணினுர். ஆனுல் அது பாபகரமானதெனக் கருதி உரோமாபுரியை விட்டு கெய்டா வென்னும் தீவிலுள்ள தனது மாளிகையை யடைந்து நிம்மதியாய் உயிர்துறக்கத் தயாரானுர். அங்கும் அந்தோனியின் ஆட்கள் பின்பற்றி வர ஸிஸரோ தனது சேவகர்களினுதவியால் ஓர் பல்லக்கில் கிளம்பி சமுத்திரக் கரையை யடைந்து அங்கிருந்து அயல் நாடுகளுக்குச்சென்று விடுவதெனத் தீர்மானித்துப் புறப்படவும் அவர் சென்ற பாதையை யறிந்து கொண்டு அந்தோனியின் ஆட்கள் பின் தொடர்ந்து வந்தனர். ஸிஸரோ திரும்பிப்பார்த்தார். தான் ஒரு காலத்தில் மரண தண்டனையினுன்று விடுவித்த லேனஸ் என்பவன் இரக்க மென்பதே யின்றி உருவிய வாளுடன் பலர் சூழ நிற்பதைக் கண்டதும் "நண்பர்களே! ஏன் தயங்குகின்றீர்கள்? உங்கள் கடமையை நிறைவேற்றுங்கள்! இறப்பதற்கு இதோ நான் தயாராக விருக்கின்றேன்!!" எனச் சாந்தமாகக் கூறினுர். மறு நிமிடம் ஏககாலத்தில் ஸிஸரோவின்மீது மூன்று வாட்கள் தாக்கின. உலகம் போற்றும் உத்தம வீரர் உலகை நீத்து விண்ணுலகேகினுர்.

ஸிஸரோவின் சிரசு அந்தோனியிடம் கொண்டுபோகப்பட்டது. ஸிஸரோவின் கட்டளையின் மீது அச்சிரம் கிறிஸ்து நாதரின் உடல் சிலுவையில் அடிக்கப்பட்டதைப்போல் சட்டசபையின் உயரத்தில் யாவரும் காணும்படியான விடத்தில் அடிக்கப்பட்டது.

# யாருக்கு ஓட்டுக் கொடுக்கவேண்டும்?

"காங்கிரசிற்கு இல்லையென்றால் எதேச்சாதிகாரம் தொடர்ந்து நடத்த வாக்களித்ததாகும்"

திரு. ஸி. ராஜகோபாலாச்சாரியார் எழுதுவதாவது :—

அபேதவாதமா அல்லது ஜன நாயகமா என்பதே இன்று வாக்காளர் முன் வைக்கப்பட்டுள்ள பிரச்னை என்று காங்கிரசை எதிர்ப்பவர்கள் பிரசாரம்செய்து வருகிறார்கள். அபேதவாதம் ஜன நாயகத்திற்கு எதிரிடையானதன்று. நான் கூறுவது தவறல்ல என்றால் இப்பொழுது சென்னையில் இரட்டை யாட்சியை நடத்திவரும் பிரிட்டிஷ் சர்க்காரைச் சார்ந்தவர்களின் பூரண அங்கிகாரம் பெற்றுள்ள கட்சி சமூக ஜன நாயகக் கட்சியென அழைக்கப்படுகிறது. அது எப்படியு மிருக்கட்டும்.

தற்போது நடைபெற விருக்கும் தேர்தலில் வாக்காளர் முன்பு வைக்கப்பட்டிருக்கும் பிரசினை ஜன நாயகக் கட்சியா அல்லது அபேதவாதமா என்பதல்ல. உண்மையாக விருப்பது சர்க்கார் நடத்திவரும் ஏதேச்சாதிகாரமா அல்லது காங்கிரஸ் ஆதரிக்கும் ஜனநாயகமா என்பதே வாக்காளர் முன்னுள்ள பிரசினை. ஆங்கிலோ இந்தியப் பத்திரிகைகளோ அல்லது காங்கிரசிற்கு விரோதமான கட்சிகளோ தாங்களே ஜன நாயகத்தை ஆதரிப்பவர்களெனவும் காங்கிரஸ் ஆதரிப்பதில்லை யெனவும் கூறிக்கொள்வதை விடப் பரிகசிக்கத் தகுந்த விஷயம் வேறில்லை. ஜனநாயக மென்பதெது வாயினும் இந்திய மக்களால் இந்திய ஆட்சியை நடத்துவதென்பதே பொருள். அவ்வாட்சியையே காங்கிரஸ் ஆதரிக்கின்றது. ஆகவே காங்கிரசை ஆதரித்து ஒட்டுக்கொடுத்தால் ஜன நாயக முறையை ஆதரித்து வாக்களிப்பதற் கொப்பாகும். அன்றிக் காங்கிரசிற்கு விரோதமாக வாக்களித்தால் யதேச்சாதிகாரம் தொடர்ச்சியா யிருந்து வருதற்கு வாக்களிப்பதாகும்.

பொருத்த மற்றதாகிய அபேதவாதப் பிரச்னை கொண்டுவரப்பட்டதன் காரணம் வெளிப்படையானதே. பொய்யை விட அரைப்பங்கு உண்மை யிருக்கும் விஷயம் அபாயகரமானது. விஷயமறியாத சாதாரண மக்களைத் தவறான வழிகளில் செலுத்த அத்தகைய உண்மை மிகவும் பயன்படும். பொது மக்களின் நன்மைக்கே காங்கிரஸ் பெரிதும் ஆதாவளித்து வருகின்றது. பிரிட்டிஷ் ஆட்சி நிலைக்கவேண்டுமென்ற எண்ணமுடையோர் காங்கிரஸ் நிலைநாட்ட விரும்பும் சுயாராஜ்யத்தினால் பணக்காரர்கட்கும் சொத்துகட்கும் பாதக மேற்பட்டு விடுமென்று கூறி மறைமுகமாக பிரிட்டிஷ் ஆட்சியை ஊக்குகின்றார்கள். கூட்டு விவசாய முறையும் பாமர மக்களை ஒன்றுபடுத்துவதும் பலஹீனமுள்ள ஜமீந்தார்களைப் பயப்படுத்தப் போதுமானதாம்; ஆகையால் அவர்களுடைய செல்வம் காங்கிரசோடு போட்டி போடுவதிலும் ஜனங்களைத் தம் வழிப்படுத்துவதிலும் செலவிடப்படும். நாட்டு மக்களனைவரும், காங்கிரசைப் பலஹீனப் படுத்துவது முழுதும் இந்திய சமூகத்தின் வலிமையைக் குறைப்பதும் தேச முன்னேற்றத்தைத் தடைப் படுத்துவதுமாகுமென்று ஞாபகப்படுத்திக்கொள்ள வேண்டும்.

விவசாயத்தைப் பற்றிய காரச்சிக் காங்கிரஸ் தீர்மானம் இதுவாகும்:—

"நிலத் தீர்வை, நிலக் குத்தகை, அனுபோக முறைகளெல்லாம் திருத்தியமைக்கப்படும். சிறிய குடியானவர்கட்கு அவர்களால் இப்பொழுது கொடுக்கப்பட்டுவரும் குத்தகை, தீர்வையாகியவற்றில் விசேஷக் குறைவேற் படுத்தி அவர்கள் சுமை நியாயமாக நேர் செய்யப்படும். தகுந்த உழுபடைகள் கிடையாவிடத்து நிலங்களுக்கு அவசியமான காலம் வரை குத்தகை கொடுக்கவேண்டாமென நிவாரண மளிக்கப்படும். அவ்வித சலுகை காட்டப்படும் சிறிய எஸ்டேட்டுகளுக்கு அவசியமான உதவியளிக்கப்படும். அதன் பொருட்டு, நியாயமான குறைந்த வருமானத்திற்கு மேற்பட்ட தொகை கிடைக்கக் கூடியவர்கட்கு வருமானத்திற்குத் தகுந்தபடி வரி விதிக்கப்படும்"

இதில் பயப்படுத்துவதாக எதுவும் இல்லை. உண்மையாகவும், விரிவாகவுமுள்ள கஷ்டத்தையே போக்குவதற்கு முயற்சி செய்யப்படுகிறது. காராச்சி தீர்மானத்தின் இதர பாகங்கள் வருமாறு:—

"ஒருவருடைய சுதந்திரமோ, வாசஸ்தலமோ, அல்லது சொத்தோ சட்டப்படியின்றி வேறெந்தக் காரணத்தை முன்னிட்டும் பரிஹரிக்கப்படமாட்டாது.

"கைத்தொழில் செய்பவர்களின் நலத்தை சர்க்கார் கவனிப்பர். மேலும் அவர்கட்கு வாழ்க்கைக்குப் போதுமான சம்பளம், சௌக்கியமான நிலைமை, அளவுக்குட்பட்ட வேலை செய்தல், குறைந்த வேலைநேரம், முதலாளி தொழிலாளி தகாறுகளைத் தீர்ப்பதற்கான முறை, கிழத்தனம், வியாதி, வேலையில்லா திண்டாட்டத்தாலேற்படும் விளைவுகளிலிருந்து பாதுகாப்பு முதலியன சட்டமியற்றப்படுவதன் மூலமும் இதர வழிகளிலும் கிடைக்கும்படி செய்யப்படும்.

"ராணுவத்திற்குத் தற்போது செலவாகும் பொருளில் பாதியாவது குறைக்கப்படும்

"சிவில் இலாகாக்களின் செலவு, சம்பளங்கள் ஆகியவை குறைக்கப்படும். விசேஷமாக வேலைக்கு வைக்கப்பட்டிருக்கும் நிபுணர்களைத் தவிர வேறெந்த சர்க்காருத்தியோகஸ்தருக்கும் சாதாரணமாக மாதமொன்றிற்கு ரூ 500க்கு மேல் சம்பளங்கொடுக்க முடியாது.

"தேசிய நலத்திற்கான முறையில் செலாவணியும் நாணயமாற்றும் ஒழுங்குபடுத்தப்படும்.

"முக்கியமான கைத்தொழில்கள், வேலைகள், உலோகச் சுரங்கங்கள், கப்பல், ரயில்வேக்கள் முதலிய போக்குவரத்துச் சாதனங்கள், சர்க்காருக்குச் சொந்தமானவை யாகவோ அல்லது சர்க்கார் ஆதிக்கத்திலோ இருக்கும்.

### ஜாதிப்பாகுபாடு

ஜாதி இரண்டொழிய வேறில்லை
[யென்றே
தமிழ் மகள் சொல்லிய சொல்
[அமிழ்தமென்போம்
நீதி நெறியில் நின்று பிறர்க்குதவும்
நேர்மையர் மேலவர்; கீழவர் மற்றோர்.
—பாரதியார்.



## லாகூரில் மகாத்மா

ஜூலை 14-ந் தேதி காந்திஜீ லாகூரில் ஓர் பெரிய பெண்கள் கூட்டத்தில் பேசியபோது அடியில் வருமாறு கூறினார்:—

நீங்கள் கொடுக்கும் பணம் உங்கள் உற்றுருறவினாகிய ஹரிஜனர்களின் க்ஷேமத்திற்காகவும் ஹிந்து தர்ம பரிபாலனத்திற்கு முதவும். இந்திய ஸ்திரீகள் ஹரிஜன முன்னேற்றத்திற்கான எல்லா முயற்சியும் செய்ய வேண்டும். தரித்திர நாராயணருக்குச் செய்யும் சேவை ஆண்டவனுக்குச் செய்வதாகும்.

அக்கூட்டத்தில் 3000 ரூபாய் வசூலாயிற்று.

### காந்திஜீ உடல் நிலை

14-ந் தேதி காலை கர்னல் டி. எச். என். ராயும், டாக்டர் நிஹால் சந்தும் மகாத்மா காந்தியின் தேக நிலையைப் பரிசோதித்தனர். ரத்தக் கொதிப்பு 170-க்கும் 175-க்கும் நடுவில் இருந்ததெனத் தெரிந்தது. அவர்கள் பின் வருமாறு அறிக்கை வெளியிட்டிருக்கின்றனர்:—

"மகாத்மாஜி லாகூரில் தங்கியிருக்கும் பொழுது நாங்கள் அவருடைய தேக நிலையை ஒழுங்காகச் சோதனை செய்து வந்திருக்கின்றோம். அவருடைய ரத்தக் கொதிப்பு 165,160 ஆக இருந்தது. ஆகையால், இப்பொழுது அவர் செய்து வருவதைப் போன்று தினந்தோறும் ஒரு அலுவல் திட்டத்துக்குப் பிறகு அவர் தடையில்லாத ஓய்வு எடுத்துக் கொண்டால் அவருடைய ரத்தக் கொதிப்பு அதிகமாகி விடாதென்று நாங்கள் அபிப்பிராயப் படுகின்றோம். அவருடைய பொதுவான தேகநிலை மிகவும் திருப்திகரமாக இருந்த போதிலும், அவர் அதிகக் களைப்பும் சிரமமும் பலஹீனமும் அடைந்திருக்கின்றார். அடுத்த இரண்டு அல்லது மூன்று வாரங்களுக்கு அவர் அலுவல் திட்டங்களை அனுஷ்டித்து வர வேண்டுமென்றால், அவர் இப்பொழுது செய்து வருவதைப் போல் தினந்தோறும் ஐந்து மணி நேரம் தடையில்லா மௌனத்தை அனுஷ்டிக்க வேண்டும். குறைந்தது ஏழு மணி நேரமாவது தூங்க வேண்டும்."

## ஐரோப்பா சமாதானம்

ஐரோப்பாவின் கீழ் தேசங்களுக்குள் பரஸ்பர சமாதான உத்தரவாத ஒப்பந்தம் ஏற்படுத்த உத்தேசிப்பதைக் குறித்து ஸர் ஜான் சைமன் காமன்ஸ் சபையில் செய்த பிரசங்கமும், புதிதாக ஒரு நம்பிக்கையான நிலைமை இதன் பயனாக ஏற்படக் கூடுமென்று காப்டன் ஈடன் தெரிவித்த அபிப்பிராயமும் பொதுவாக வரவேற்கப்படுகின்றன. காமன்ஸ் சபையார் ஒரு மனதாக இந்த விஷயத்தை வரவேற்றது போல் வேறெதையும் வரவேற்ற தில்லையென்று நியூஸ் கிரானிகள் கூறுகிறது. ஜெர்மனிக்கு இதன் மூலம் சமத்துவம் ஏற்படச் செய்வது கஷ்டமான காரியமல்ல வென்றும், பிரிட்டன், பிரான்ஸ், ருஷ்யா ஆகிய மூன்றும் ஒப்பந்தத்திற்கு அநுகூலமாகவே யிருக்கின்றன வென்றும், சீனர் முஸோலினியின் சம்மதத்தைப் பற்றியும் ஸர் ஜான் சைமனுக்குச் சந்தேகமில்லை யென்றும், அப்பத்திரிகை சுட்டிக் காட்டுகின்றது.

ஜெர்மனி இந்த ஒப்பந்தத்தில் சேராமல் விலகி நிற்க யாதொரு நியாயமான காரணமும் கிடையாதென்றும், ஜெர்மனிக்கு விரோதமாக யாரும் சூழ்ச்சி செய்யவில்லை யென்பதை ஜெர்மனி அறிந்து கொண்டால் ஜினிவாவுக்குத் திரும்பிவர ஜெர்மனி தயங்காதென்றும், 'மாஞ்செஸ்டர் கார்டியன்' கூறுகின்றது.

ஆயுதப் பரிஹாரத்திற்கு இனி நிச்சயம் வழி பிறக்குமென்று 'டைம்ஸ்' பத்திரிகை அபிப்பிராயப் படுகின்றது. புதிய ஒப்பந்தம் சர்வதேச சங்கத்தின் அதிகாரத்தைப் பாதிக்காதென்றும், அந்த அதிகாரத்தைப் பலப்படுத்தவே செய்யுமென்றும், தொழிற் கட்சியார் இந்த ஒப்பந்தத்தை வரவேற்பதாகவும் 'டெய்லி ஹெரால்டு' கருதுகின்றது.

### திருவாங்கூர் சரக்கு விற்பனை

திருவாங்கூர் சரக்குகளை விற்பனை செய்ய பம்பாயில் ஒரு நிலயத்தை (திருவாங்கூர்) சர்க்கார் வாங்கி யிருக்கின்றனர். அதனை ஜூலை 16-ந் தேதி சர் புருஷோத்தமதாஸ் தாகூர்தாஸ் திறந்து வைத்தார்.

### விருதுநகரில் வெடிக்குண்டு

ஜூலை 16-ந் தேதி காலையில் விருதுநகர் தபாலாபீஸ் கட்டிடத்தின் மேலைச் சுவரில் ஒரு வெடிக்குண்டு போடப்பட்டதாகவும் போலீஸ் இன்ஸ்பெக்டர் வந்து வெடிக்குண்டிலுள்ள ஆணி முதலியவற்றை எடுத்துக் கொண்டு யாதாஸ்து எழுதி யிருப்பதாகவும் தெரிகிறது.



மகாத்மா காந்தி பூனா வெடிக்குண்டிலிருந்து தப்பிக்கொண்ட நிகழ்ச்சியை முன்னிட்டுச் சென்னையில் 15-ந்தேதி பொதுக்கூட்டம் நடத்தப்பட்டது. அதில் ஆனன் ஆஞ்சிலோ தலைமை வகித்தார். —P.P.B.

## சமதர்மக் கட்சி ஆரம்பம்

### சென்னையில் ஸ்தாபனம்

காங்கிரஸிற்குள் சமதர்மக் கட்சி யொன்றை அமைக்கும் நோக்கத்தோடு ஜுலை 15-ந் தேதி காலை காங்கிரஸ் மாளிகையில் தமிழ்நாடு காங்கிரஸ் வாதிகள் கூட்டமொன்று நடந்தது. திரு. ஆர். நாராயண அய்யங்கார் தலைமை வகித்தார். திருவாளர்கள் கே. எஸ். கோபாலகிருஷ்ணன் ஓ. பி. ராமசாமி கே. சுப்பிரமணியம், ஸ்ரீ. பாதசங்கர், ஏ. ஆர். வி. ஆச்சார், கே. சடகோபன், எஸ். வெங்கடாராமன், ஆர். பார்த்தசாரதி, பி. ராமமூர்த்தி ஸ்ரீமதி எம். ஆர். சகுந்தலாபாய் முதலியவர்கள் வந்திருந்தனர்.

திரு. கே. எஸ். கோபாலகிருஷ்ணன், சமதர்மக் கட்சியின் லட்சியங்களை விளக்கிக் கூறினர். பிறகு விவாதம் நடந்தது. கடைசியாகத் தமிழ்நாடு சமதர்மக் கட்சி யென்ற பெயருடன் சமதர்மக் கட்சி யொன்றை அமைக்க முடிவு செய்தனர். அக் கட்சியில் அங்கத்தினராகச் சேர விரும்புவோர் 4 அணுக் கட்டணம் செலுத்த வேண்டும். கட்சியின் அமைப்புத் திட்டத்தையும் வேலைத் திட்டத்தையும் தயாரிக்கக் கீழ்க் கண்டவர்கள் அடங்கிய கமிட்டி யொன்றை அமைத்தனர். திருவாளர்கள் ஆர். நாராயண அய்யங்கார், கே. சந்தானம், கே. எஸ். கோபாலகிருஷ்ணன், ஓ. பி. ராமசாமி, ஆர். பார்த்தசாரதி, ஸ்ரீ பாதசங்கர், கே. சடகோபன், டி. ஜி. லட்சுமணசாமி முதலியார், பி. ஆர். கே. சர்மா.

கோவையில் தமிழ்நாட்டு மாகாண மகாநாடு நடைபெறும்போது சமதர்மக் கட்சி மகாநாடும் கூட்டவேண்டு மென்றும் தீர்மானித்தனர்.

---

## மண்ணுக்குள் விக்ரகங்கள்

### தின்னியம்

திருச்சி ஜில்லாவைச் சேர்ந்த தின்னியம் கிராமத்தில் திரௌபதியம்மன் கோவிலுக்குச் சொந்தமான இனம் புன்செய் நிலத்தில் மண்ணை வெட்டிய போது விநாயகர், சுப்பிரமணியம் வள்ளியம்மை, தெய்வநாயகி, சதுர்புஜ லக்ஷ்மி, பைரவர், காளிங்க நர்த்தனக் கிருஷ்ண விக்ரஹாதிகளவை கிடைத்தனவாம்.

### கர்நூல்

கர்நூல் டௌனப்பை ரோடில் சர்க்கார் ஒரு பெருவைத் திருத்துவதற்காகத் தோண்டிய போது ஒரு கோவில் தென்பட்டது. அதில் சிவபிரானது விக்ரஹமும் நந்தி விக்ரஹமும் இருந்தன. இப்போது பலர் அக்கோவிலைத் தரிசித்து வருகிறார்கள்.

---

### மணிக்கு 330 மைல்

ஹாலந்தில் புதிதாக ஓர் ஆகாயவிமானத்தைக் கட்டியிருக்கிறார்கள். அதில் பிரிட்டிஷ் எஞ்ஜின்கள் தான் அமைந்திருக்கின்றன. அது மணிக்கு 330 மைல் வேகத்தில் செல்கிறதாம். வெள்ளோட்டம் பார்த்த நாளையில் லப்டினண்டு சாண்டர்ப் 13000 அடி உயரத்திலிருந்து 4000 அடி உயரத்திற்கு அவ் விமானத்தை அதிகவேகமாக இறக்கிப் பின் பூமிக்குக் கொண்டுவந்தார். அக் காட்சி பயங்கரமா யிருந்ததாம்.





## உலகப் போக்கு

---

### ஒரு இளவரசரை

நாய்கள் தின்று விட்டனவாம். தின்ற நாய்களின் தொகை எண்பது !! அத்தனையும் பிரஞ்சு நாய்கள் ; அல்ஸேஸ் என்ற ஜாதியைச் சேர்ந்தவை. இறந்துபட்ட இளவரசர் மத்திய இந்தியாவிலுள்ள ஒரு சமஸ்தான மன்னரின் ஒன்றுவிட்ட சகோதரர்—இவர் விருந்துக்காகத் தம் தமையனர் வீட்டுக்குச் சென்றிருந்தார். அந்தச் சங்கதி தெரியாததால் நாய்கள் அவரை விருந்தாக்கிக் கொண்டன. நாய்களிலும் பிரஞ்சுநாய்களல்லவா ? தசையில் ஒரு பொடியைக் கூடப் போடவில்லை; அத்தனையும் சாப்பிட்டு விட்டனவாம் மறுநாள் எலும்பு மட்டிலும் தான் காணப் பட்டதாம். இந்த அநீதக் கொலைக்காக நாயின் சொந்தக்கார ராஜா, இறந்தவரது குடும்பத்திற்கு ஏராளமான நஷ்டஈட்டைக் கொடுத்தாராம்.

### பொள்ளாச்சியில்

சுப்பிரமணியன் செட்டியார் என்ற ஒருவரின் தலையில் ஒரு "ஸ்குரூ" கழன்று "லூசாகி" விட்டதாம். ஆதலால் அவர் ஒரு சட்டுவத்தை எடுத்துத் தன் மூன்று வயதுக் குழந்தையையும் ஒரு வயதுக் குழந்தையையும் முறையே சில குத்துகள் விகிதம் குத்தி இரத்தத்தை எடுத்தாராம். உடன் ஒரு குழந்தை "விண்ணேகி" விட்டதாம். அப்பால் லூஸ் செட்டியார் தன்னுடைய வீரச்செயலைக் கலக்டரிடம் தெரிவித்துச் சர்ட்டிபிக்கெட் பெறுவதற்காகக் கலக்டராபீசுக்கு ஓடினராம். கெட்டகாலம்! கலக்டர் அங்கில்லை. ஆதலால் குமாஸ்தாவிடம் சொல்லி உடன் கலக்டரை அழைத்துவரச் சொன்னர். குமாஸ்தா அவர் உத்தரவுப்படி நடக்கவில்லை. உடனே செட்டியார் அவரை நன்ருகப் புடைத்தார். புடைக்கவும் போலீசாருக்கு அறிவிக்க அவர்கள் "லூசை" ப் பிடித்துத் தலையைப் பரிசோதித்தார்களாம். சில நட்டுகள் கழன்றிருந்தனவாம். ஆதலால் தகுந்தபடி சிகிச்சைசெய்ய வேண்டுமென்று அவரை வைத்திருக்கிறார்களாம்.

### மக்களின் சனியைத்

தீர்க்கவல்ல கேதாரநாதிற்கு (பத்ரிநாதத்திற்குச் சமீபம்)பெருஞ் சனிபிடித் தாட்டுகிறது. இம்மாதம் (ஜுலை) 3-ந் தேதி அந்த ஊரையும் பக்கத்து மலைகளையும் பிடித்தசைத்து நடுக்கி விட்டது சனி. அந்தச் சனியெது தெரியுமா ? அதுதான் பூகம்பம். இந்த நடுக்குவாதம் பீஹாரைப் பிடித்தது முதல் இந்தியாவை விட்டுப் போகமாட்டேனென்கின்றது. ஏதாவது ஒரு இடத்தைப் பிடித்துக்கொண்டு ஒரு வாரத்தில் ஒருமுறையாவது அசைத்துப் பார்க்கிறது. இதுகாறும் அது பிடித்த நோயாளி உறுதியற்றவர்கள். ஆனுல் இப்போது பிடித்திருப்பதோ மிக மிகப் பெரிது. எவ்வளவு பெரிது தெரியுமா? 2000 மைல் நீளமும் 150 அகலமுமுள்ள ஹிமாலயம். இதில் அதிர்ச்சி அதிகம் (3ந் தேதி) ஏற்பட்ட விடம் தான் கேதாரநாத். ஜனங்கள்—பீஹார் கதையை அறிவார்களல்லவா?—நடுக்கமேற்பட்டதும் குலை நடுங்கிப் பல திசைக்கு மோடினர்கள். இப்போது கொஞ்சம் ஓட்டம் தீர்ந்திருக்கின்றார்களாம்.



சென்ற வாரம் பிசு சமஸ்தான மகாராஜா அவர்கள் M. V. விக்டோரியா என்ற இத்தாலிய மெயில் கப்பலில் லண்டனுக்குப் புறப்பட்டுப் போனர். —S.P.B.

### அகில இந்திய சனாதனிகள்

கல்கத்தாவில் கூடியிருந்து கொண்டு காபி யெழுதிப் பழகுகிறார்கள். அவர்கள் பூரி சங்கராச்சாரியார் என்பவரின் அக்கிராசனத்தினடியில் ஜுலை 13-ந் தேதி கூடி அவர்கட்குத் தோன்றியவற்றைப்பேசிச் சபையை நிரப்பி, கடைசியில் தீர்மானங்களென்ற சில வாக்கியங்களைப் படித்து நிறை வேற்றியதாக எழுதினர்கள். அந்தத் தீர்மானங்கள்:—

> அகில இந்திய சனாதனி தேர்தல் போர்டு என்ற புதிய அரசியல் ஸ்தாபனத்தை ஏற்படுத்த வேண்டும். இந்திய சட்ட சபைகள், முனிசிபாலிடிகள், ஜில்லா போர்டுகள் முதலிய ஸ்தாபனங்களின் தேர்தல் சம்பந்தமாக இந்தியாவெங்கும் பிரசாரவேலையை உடனே மேற்கொள்ள வேண்டும்.

இவ்வாறு காங்கிரஸ் தீர்மானத்தைக் காப்பியடித்த அகில இந்திய சனாதனிகள் ஒரு சனாதனப் பார்லிமெண்டரி போர்டையும் காரியதரிசியாக ஒரு சனாதனப் புலபாய் தேசாயையும் தேர்ந்தெடுத்திருந்தால் பொருத்தமாயிருந்திருக்கும்.

### ஒன்பது முஸ்லிம்கள்

சேர்ந்து ஒரு அழகிய நாயர்ச் சிறுமியைப் பலாத்காரமாகத் தூக்கிச் சென்று முஸ்லிம் மார்க்கத்தில் சேர்த்து மனைவியாக்கிக் கொண்டனர் என்று கௌரி அம்மாள் (பெண்ணின் தாய்) என்பவர் ஆலப் புழையில் வழக்குத் தொடர்ந்தார். வழக்கு நடைபெற்றதில் சிறுமி (பவானி என்பது பெயர்) அடியில் வருவாறு வாக்குமூலம் கொடுத்தாளாம்:—

"என்னை எவரும் பலாத்காரமாகக் கொண்டு செல்லவில்லை. நானே ஒரு முஸ்லிம் வாலிபரோடு சென்றேன். எனக்குச் சிறு பிராயத்தில் மணம் செய்விக்கப்பட்டது. நான் அவரோடு வாழ்வதில் எத்தகைய சுகத்தையும் காணவில்லை. ஆதலப்பற்றியே முஸ்லிமோடு சென்றேன்.

### திருநெல்வேலிக் கடுத்த

செங்கட்டியூரில் ஒருசாமி தீயைக் கொளுத்திவிட்டார். அந்தச் சாமியின்

பெயர் சுடலைமாடன். அவர் மகா குரூர குணமுடையவராம். ஜூலை 13-ந்தேதி அவரைத் திருப்திப்படுத்துவதற்காகப் பூசை போட்டார்கள். ஆதலால் அவர் ஒருவாறு சந்தோஷப்பட்டு அருள்சுரந்தார். அவ்வருள் சில பக்தர்கள் மேல் விழுந்து அவர்கள் குதிக்கத் தொடங்கினார்கள். உடன் பக்கத்திலிருந்த மேளக்காரர்கள் தாளம் போட்டு பக்தர்கள் நடனத்தை காலப்படுத்தி சங்கீதத்தின் கீழ் கொணர்ந்தனர். இந்த வேடிக்கையைப் பலர் கோயிலிலும் வெளியே போடப்பட்டிருந்த பந்தலிலு முட்கார்ந்து பார்த்துக் கொண்டிருக்க, சாமி—பூசை சரியாகப் போடவில்லையாம் ஆதலால்—மெதுவாகக்கோவிலை மூடியிருந்த ஓலைக் கூரையில் நெருப்பை வைத்துக் கொண்டார். அந்நெருப்பு அதிகோரமாய் எரிந்தது. சுமார் 50 பேர்கள் வெந்து போனார்கள். 30 பேருக்குக் காயம் பட்டு ஆஸ்பத்திரிக்குப் போனார்களாம். கோவிலில் நெருப்பு வந்ததற்குக் காரணம் மூன்றுவிதமாகக் கூறப்படுவதில் ஒன்று சாமியே வைத்துக் கொண்டாரென்பது. ஒரு சாமி—யாரோ நல்ல வேளையாக இந்தப் பஞ்சகாலத்தில் பணம் போட்டுப் பூசை போட்டதில் ஒரு இம்மி குழம்பிப்போய் விட்டதென்று நினைத்து, சொந்த வீட்டில் நெருப்பை வைத்துக் கொண்டாரென்றால் அவரைப்போல் முட்டாளிருக்க முடியுமா? ஆகவே அவர் மீது பழி போட்டுக் கேசுகளாக்குவது மடமை. நெருப்புக்குக் கூறப்படும் மற்றொரு காரணம், சாமி அருளைக் கையில்வைத்துக்கொண்டு ஆடிய ஆசாமிகள் தீப் பந்தங்களை மேலும் கீழும் அசைக்க, அதனால் கூரையில் நெருப்புப் பற்றிவிட்டதென்று சொல்லப்படுகிறது. இஃது உண்மையானால் 80 பேருடைய துன்பத்திற்கு இவர்களே பாத்திரர்கள். இவர்கட்குச் சாமியின் அருள் வந்திருந்தால் நெருப்புக் கூரையைத்தாவுமா? எனவே இவர்கள் ஆட்களைக்கொலை செய்ததோடு பிழைத்தவர்களைக் கடவுள் அருள் பெற்றுவிட்டதாகக் கூறி ஏமாற்றியுமிருக்கிறார்களென்றேற்படுகிறது. நெருப்புக்கு மூன்றாவதாகக் கூறப்படும் காரணம் கோவிலையண்மிய ஒரு வைக்கோல் போரில் நெருப்புப் பட்டுவிட்டது என்பதாம். வைக்கோல் போர் எரிந்ததால் கோவிலில் நெருப்புப்பிடித்துக் கொண்டதென்றால் இரண்டுக்கும் வித்தியாசமில்லையா? சாமி சொந்தப் பொருளுக்கு என்ன மான்மியம் வைத்திருக்கிறார்! எப்படியாவது போகட்டும். ஒரு பூசை எத்தனையோ ஆடு கோழிகளோடு 50 மனிதர்களுயிரையும் வாங்கிவிட்டது.

### தென்காசிக்குச் சமீபம்

குத்துக்கல்வலசை என்ற ஊரில் 40 வயதுள்ள ஒரு நாடார் பெண்ணுக்கும் குடும்பத்தில் சிலருக்கும் சண்டையேற்பட்டதாம். அதனைப் பொறுக்கமுடியாது அவள் சென்ற வியாழக்கிழமையன்று கிணற்றில் குதித்துக் கோபத்தைத் தணித்துக்கொண்டாளாம். அப்புனிதவதி தன் உயிரை மட்டிலுந்தானா நீக்கிக்கொண்டாள் என்றால் இல்லை. முறையே 7, 4, 2 வயதான தன் மூன்று குழந்தைகளையும் கூடக் கிணற்றில் தூக்கிப் போட்டுக் கொண்டாளாம். கலிகால நல்லதங்காள்.

## போலி வைதிகம் ஒழிக!





# ஐரோப்பாவில் விவசாய அபிவிருத்தி

ஐரோப்பா யுத்தத்தின் பின்னர் பெரிய மாற்ற மேற்பட்டிருக்கிறது. யுத்தத்தின் முன்பு கைத் தொழில் அபிவிருத்தியிலேயே மேனாட்டார் கண்ணுங் கருத்துமாக இருந்தனர். அதுகாலை கைத்தொழில் பொருட்கள் வெளிநாடுகட்கு அனுப்பப்பட்டு விவசாயப் பொருள் வாங்கப்பட்டன. ஆனால் சமீபகாலங்களிலேற்பட்ட பலகாரணங்களால் சர்வதேச வியாபாரம் குறைந்து போக, அவ்வேதுவால் இயந்திரங்களில் செய்த சாமான்களும் குறையலாயின. ஆகவே ஐரோப்பாவினால், வெளிநாடுகளிலிருந்து முன்போல வாங்கமுடியவில்லை. ஆதலால் இறக்குமதி செய்த பல விளைவுப் பொருட்களை உற்பத்தி செய்ய வேண்டியிருக்கிறது. ஆதலால் இன்றைய ஐரோப்பாவின் தேவை பயிர் செய்யநிலமும் அவற்றிற்குத்தகுந்த உழுபடைகளுமாம். இதுகாறு மிருந்தது போல் ஆள் தேட்டமும் கைத்தொழில் ஆலைகளுற்பத்தியு மிப்போது இல்லை.

இந்த நிலைமையில் நன்கு யோசித்தால் மேனாடுகட்கு இருவிதப் பிரசாரம் செய்ய வேண்டியிருக்கிறதென்று காணலாம். அவ்விரு பிரசாரங்களில் ஒன்று எல்லோரையும் "நிலத்துக்குத் திரும்பி வாருங்கள்" என்று கேட்டுக் கொள்வது; மற்றொன்று உற்பத்தி செய்த விளைபொருட்களை விற்பனை செய்ய இடம் தேடுவது.

இவ்வாறு மேனாடு வேளாண்மையைக் கைக் கொண்டிருப்பதால் இன்று அடையும் நன்மை பல. எங்கும் சமநிறையும், உறுதிப்பாடும், அறிவுடைய வாழ்க்கையும் ஓங்க அதேபொழுதில் கைத்தொழிலால் ஏற்பட்ட அட்டூழியங்களும்மாய்கின்றன.

ஐரோப்பாவில் "நிலத்துக்குத் திரும்பி வாருங்கள்" இயக்கம் அதிகமாகப் பலம் பெற்றிருப்பது ஜர்மனி, இத்தாலி ஆகிய இரண்டிலுமாம். இங்கிலாந்தும் ஜர்மனியும் உள்நாட்டு வர்த்தகத்தை (விளைந்த பொருட்களை)ப் பெருக்க முயல்கின்றன.

### ஜர்மனியில் விவசாயம்

ஜர்மனியில் கைத்தொழில் ஒரு காலத்தில் உச்சஸ்தானத்தை யடைந்திருந்தது. ஆனால் இப்போது தகுந்த மார்க்கெட்டுகளைக் காண முடியாததால் அந்த நிலைமையைக் காப்பாற்ற முடியவில்லை. ஆதலால் வேலையில்லாதார் அங்கு ஏராளமாகவிருக்கின்றனர். அவர்களை எல்லாம் விவசாயத்திற்குத் திருப்பி வருகிறார்கள் சர்க்கார்.

ஜர்மனி உழவுத் தொழிலை, இதர வேலைகளைப்போல ஒரு ஒழுங்கான அமைப்பின் கீழ் கொண்டுவந்திருக்கிறது. விவசாயம் ஒரு தொழிலென்பது ஜர்மனியின் கருத்து. அன்றி மற்றத்தொழில் சாஸ்திரங்களைப்போல பயிர்த்தொழிலின் சாஸ்திரங்களையும் கற்க வேண்டுமென்று கருதுகிறது. ஆதலால் 17 க்கும் 25 க்கும் இடைப்பட்ட வயதுடைய உற்சாகிகளைத் தேர்ந்தெடுத்து ஆரம்பப்படிப்பாக ஆறுமாதம் பயிற்றுகின்றார்கள். பெண்களாக விருந்தால் 3 மாதம் படித்தால் போதுமானதாகும். இவர்கள் பயில்கின்ற இடத்திற்கு வேலை ஊழிய முகாம் என்பது பெயர். இம் முகாம்களில் அவர்கள் (மாணவர்கள்) கிராமப் புனருத்தாரண வேலை பழகுகிறார்கள். ஜர்மனியில் சர்வகலாசாலைகளில் தேர்ச்சிபெற விரும்புமெந்த மாணவனும் இப்பரீட்சையில் தேறியிருக்க வேண்டும். ஜர்மானியர் நகர வாழ்க்கைக்கும் கிராம வாழ்க்கைக்கும் சம்பந்தமில்லை யென்பதை யுணர்ந்து வருகிறார்கள். ஆதலால் அதிகம் செலவில்லாமலே விவசாயத்தை நடத்திவர ஏலுகின்றது. மாணவர்கள் ஆறுமாதம் உழவுக்கலை பயின்ற பின்னர் நேர்ப்பழக்கத்திற்காக வயல்கட்குச் சென்று பயிலவேண்டும். இரண்டு வருடம் அவ்வாறு படித்ததும் டப்ளோமா(விருதுகள்) நல்கப்படுகின்றன. இவ்வாறு விருது பெற்றவர்கட்குச் சுலபமாக நிலம் ஒதுக்கிக் கொடுக்கப்படும். சில மாதங்களில் ஜர்மானியர்—இத்தாலியரும் அவ்வண்ணமே—தனிமனிதர்களால் வேளாண்மையைச் செய்யமுடியாது என்று தெரிந்துகொண்டு சிறு சிறு சொசைட்டிகள் (கழகங்கள்) நிறுவினர். இச்சங்கங்களின் மேல் பார்வை 1918 ம் வருடம் முதல் தற்போதிய அரசாங்கத்தின் கையிலேயே இருந்து வருகிறது. சர்க்கார் அக்கழகங்கட்கான விவசாயச் செலவைக் கடனாக்கொடுத்துப் பயிர்தோறும் (பருவம் தோறும்) சிறிய சிறிய தவணைகளாக வசூலித்து வருகிறார்கள்.

இன்று ஜர்மனியில் மேற் குறிப்



சர்தார் படேலுக்கு வரவேற்பளிக்க பூனா காங்கிரஸ் மண்டபத்தில் ஓர் பொதுக்கூட்டம் நடைபெற்றது. படத்தில், தலைமை வகித்த சரோஜனிதேவி பேசுவதைக் காணலாம். திரு. புலபாய் தேசாய், சாதார் படேல் ஆகிய இருவரும் மேடைமீதுட்கார்ந்திருக்கின்றனர். —S. P. B.

பிட்டவாறு ஏற்பட்டிருக்கும் கழகங்களின் கையில் 2 லட்சத்து 50 ஆயிரம் ஏக்கர்களிருக்கின்றன. அவற்றை விவசாயப் பரீட்சை தேர்ந்த மாணவர்களை எதிர்பார்த்து வைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

பர்லினிலிருந்து 50 மைல்களுக்கப்பால் ஒரு பெரிய விவசாயப் பண்ணையிருக்கிறது. இது ஒரு பழைய பெரிய தளகர்த்தருக்குச் சொந்தம். தற்போது இதனை யனுபவிப்பது ஒரு கழகமாம். இக்கழகத்திற்கு ஒரு பொருளாதார கௌன்சிலும் ஒரு தலைவருமுண்டு. ஜர்மானியர்கட்குக் கமிட்டி நிர்வாக முறையில் நம்பிக்கையில்லை. அவர்கள் ஒரு மனிதனிடம் அதிகாரமிருந்தால்தான் காரியம் ஒழுங்காய் நடக்குமென்று நம்புகின்றனர். அங்கு சுமார் 70 குடும்பங்கள் உள. ஒவ்வொரு குடும்பத்திற்கும் சற்றேறக்குறைய 50 ஏக்கர்கள் விகிதமுண்டு. அக்குடும்பங்களினிடையே பல உபதொழிலாளிகளும் இருக்கிறார்கள்—[அதாவது அம்பட்டர்கள், கொல்லர் வைத்தியர்கள், பாற்காரர்கள் முதலியவர்கள்] அவர்கட்குத் தத்தம் சம்பளத்திற் கேற்றவாறு பத்து, பன்னிரண்டு, பதினைந்து என்று ஏக்கர்கள் நல்கப்பட்டுள்ளன.

மற்றொரு இடத்தில் சுமார் 200 இளைஞர்கள் வாழ்வதற்குப் போதுமான விளை நிலங்களிருக்கின்றன. அந் நிலங்கள் சிறுசிறு பகுதிகளாகப் பிரிந்து ஒவ்வொரு பகுதிக்கும் ஒவ்வொரு தலைவர்களை ஏற்றுக் கொண்டிருக்கின்றன. இத்தலைவர்கள் தொழிலாளிகளைக் கவனித்துக் கொள்கின்றார்கள். தொழிலாளிகள் கூடிய வரையிலும் சுத்தமான இடங்களிலேயே வசிக்கின்றார்கள். அவர்கள் தினசரி ஆறுமணி விகிதம் வேலை செய்கிறார்கள். அவர்கட்குப் பொதுப் படிப்புக் கொடுக்கப்படுகிறது. பொழுது போக்குக்கும் வசதி செய்யப்படுகிறது. சுருக்கமாகச் சொன்னால் ஜர்மனியில் 50 லட்சம் ஏக்கர் நிலம் கிருஷி செய்யப்படுகிறது. அத்தனைக்கும் பணம் செலவில்லை. வேலையில்லா ஜர்மானியரே பாடுபடுபவர்கள்.

### இத்தாலி நிலைமை

இத்தாலி "நிலத்திற்குத் திரும்பு" இயக்கத்தைப் பொறுத்த வரையிலும் ஜர்மனியையே ஒத்திருக்கிறது. அரசாங்கம் பயிர் செய்வதற்கு வேண்டிய பணத்தில் நூற்றுக்கு 87½ யை தம் சொந்தத்தி லிருந்து கொடுக்கிறது. ஜெர்மன் தொழிலாளர்களில் பெரும்பாலார் கைத் தொழில் நிலையங்களை விட்டு நீங்கியவர்கள். ஆனால் இத்தாலியன் தொழிலாளர் அப்படியால்லர். அவர்களில் பெரும்பாலார் ராணுவத்திலிருந்து விடுதலை யடைந்தவர்களாவர். அவர்கட்குப்பயிர்த் தொழில் நன்கு தெரியும். ஆகவே ஜர்மானியரைப் போல பயிற்சியளிக்கப்பட வேண்டிய தேவையில்லை. ஆனால் இத்தாலிய மண் ஜர்மனியைப்போன்று அவ்வளவு வளமுடையதல்ல.



மகாத்மா காந்தி வெடிக்குண்டு சம்பவத்திலிருந்து தப்பியது பற்றிய சந்தோஷத்தைத் தெரிவிக்கும் பொருட்டு ஞாயிறன்று பூனா காங்கிரஸ் மண்டபத்தில் கூட்டப்பட்ட கூட்டத்தில் சர்தார் வல்லபாய் படேல் விஜயம் செய்திருந்தார். அவருக்குச் சிறந்த வரவேற்பளிக்கப்பட்டது. ஸ்ரீ சரோஜனி தேவி அக்கூட்டத்திற்குத் தலைமை வகித்தார். S. P. B.

மேற்குறிப்பிட்ட இரு நாடுகளிலும் விவசாயம் மிகவும் வெற்றியடையுமென்பதில் ஐயமில்லை. அத்தேய மக்கள் பண்டைக்கால விவசாயத்திற்கு வரவில்லை. நவீன சாஸ்திரிய முறை பற்றிய விவசாயத்திற்கே வந்திருக்கின்றனர். ஆகவே இப்புது முயற்சியை முன்னேற்ற மென்றுதான் குறிப்பிட வேண்டும்.

அடுத்தபடியாக விளைவிக்கப்பட்ட பொருட்களை விற்பனை செய்வதென்பது கவனிக்கப்பட வேண்டிய விஷயமாகும். மேனுடுகள் பல வருடங்களாக விற்பனை செய்வதுபற்றி யோசித்து வருகின்றன. இங்கிலாந்து கடைசியில் மக்களை (பிரிட்டிஷாரை) வற்புறுத்துவதென்று முடிவு செய்திருக்கிறது. 1931-லும் 1933-லும் விற்பனைச் சட்டங்கள் இயற்றப்பட்டன. அதன்படி ஜனத்தொகையில் ஒரு பகுதி வியாபார விஷயத்திற்குக் கட்டுப்பட்டிருக்கிறது. மேலும் இச் சட்டப்படி கரும்பு உற்பத்தி கோதுமை உற்பத்தி முதலானவைகள் பாதுகாக்கப்படுவதுடன் விசேஷ அபிவிருத்தியையும் அடைகின்றன. பிரிட்டனிலுள்ள பால் முழுவதும் பால் மார்க்கெட் போர்டுக்கு அனுப்பப்பட வேண்டும். இத்தகைய முறைகளால் இறக்குமதிக் கட்டுப்பாடும் விலைவாசி நிர்ணயமும் ஏற்படுகின்றன. கோதுமை வெண்ணெய் முதலானவைகளைக் குறித்து ஜெர்மனியிலும் இத்தகைய முறை அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது.

மேற்கூறிய இரண்டு முறைகளையும் இந்தியா பின்பற்றுமாயின் இந்திய விவசாயம் அபிவிருத்தியடைவதுடன் செல்வ நிலையும் பெருகும்.

---

**தீண்டாமை ஒழிக!**



# விலை வாசிகள்.

## வட்டி விகிதம்.

இம்பீரியல் பாங்கு:—மூன்றரை பெர் [சென்டு.

இங்கிலாந்து பாங்கு:—இரண்டு பெர் [சென்டு.

இரங்கூன் நடப்பு வட்டி.

| | |
|---|---|
| பவ-ஷூ ஆனி | 0—4—0 |

இரங்கூன் தவணை வட்டி.

| | |
|---|---|
| ஆனி 7-வ | 0—3—0 |

சிங்கப்பூர் நடப்பு வட்டி.

| | |
|---|---|
| பவ-ஷூ வைகாசி | 0—5—0 |

சிங்கப்பூர் மூன்று தவணை வட்டி.

| | |
|---|---|
| ஆனி 1-வ | 0—4—9 |

கொழும்பு நடப்பு வட்டி.

| | |
|---|---|
| ஜூன் | 0—6—0 |

செய்கோன் நடப்பு வட்டி.

| | |
|---|---|
| பவ-ஷூ சித்திரை | 0—5—3 |
| தவணை வட்டி | 0—5—3 |

சென்னை நடப்பு வட்டி,

| | |
|---|---|
| பவ சித்திரை | 0—8—0 |
| வைகாசி | 0—7—6 |
| ஆனி | 0—7—0 |

## உண்டியல் விலை.

| | |
|---|---|
| ஸ்டெரயிட்ஸ் விற்பனை | 157¼ |
| ,, 30 நாள் தவணை வாங்குவது | 150 |

## தங்கம், வெள்ளி.

ஜூலை 18-வ

| | |
|---|---|
| சவரன் (மொத்தம்) | 21—9—6 |
| ,, சில்லரை | 21—10—0 |
| ஆலைத்தங்கம் தோலா 1-க்கு | 34—2—9 |
| மூஸா தங்கம் | 33—12—0 |
| வெள்ளிக் கட்டி | |
| 100 ரூபா எடைக்கு | 58—4—0 |
| ,, 1 ரூபா எடைக்கு | 0—9—6 |

## ரப்பர்.

கொழும்பு, ஜூலை 16-வ

இன்று பிற்பகல் 2–15-க்கு கிரீப் ரப்பர் 38 சதமாகவும், ஷீட் ரப்பர் 35 சதமாகவும் விற்றது. நேற்றையக் கடைசி விலை முறையே 37½, 34½ சதமாகும்.

கல்கத்தா, ஜூலை 16-வ

ரப்பர் வியாபாரம் உறுதியாயிருந்ததோடு நல்ல மதிரி நடைபெற்றது.

| | | |
|---|---|---|
| கேடா | 3—32½ | சென்டு. |
| ஞுங்கை ரொமல் | 2—20 | ,, |
| தாப்பா | 2—35 | ,, |
| பொரிலி | 2—15 | ,, |
| பாஜாம் | 2—30 | ,, |

## கப்பல்.

எதோபியா சென்னையிலிருந்து ஜூலை 20-ந் தேதி ரங்கூனுக்குச் செல்லும். அப்பால் 30-ந் தேதி திரும்பிவந்து ஆகஸ்டு 3-ந் தேதி மீண்டும் ரங்கூனுக்குப் புறப்படும்.

அரோண்டா என்ற கப்பல் ஜூலை 23-ந் தேதி சென்னை வந்து 27-ந் தேதி புறப்பட்டு (ரங்கூன்) செல்லுமென்று எதிர்பார்க்கப்படுகிறது.

### சிங்கப்பூருக்கு

எரின்புரா என்ற கப்பல் ஜூலை 25-ந் தேதி சென்னை வந்து. அன்றைக்கே மலாயா செல்லும்.

ரோனு ஜூலை 28-ந் தேதி சென்னை வந்து 31-ந் தேதி போகிறது.

### செய்கோனுக்கு

காம்பெயின்; ஜெனரேல் மெட்ஜிங்கர், காமிசேயர், ராமேல் என்ற கப்பல்கள் முறையே ஆகஸ்டு 7-ந் தேதி செப்டம்பர் 4-ந் தேதி அக்டோபர் 2-ந் தேதி சென்னை வந்து சேரும். இவை பாண்டிச்சேரி, சிங்கப்பூர், செய்கோன் முதலிய விடங்கட்குச் செல்லும்.

### "ஜவஹர்லாலை விடுவிக்க மட்டோம்',

ஜூலை 16-ந் தேதி காமன்ஸ் சபையில் டாம் ஸ்மித், பண்டித ஜவஹர்லால் நேருவை விடுதலை செய்வதுபற்றிய கேள்வி கேட்டார். இந்தியா மந்திரி ஹோர், விடுதலை செய்வதுபற்றி ஆலோசனையே செய்ய முடியாதென்றும், ராஜத்வேஷம் மிகுந்த மூன்று பிரசங்கங்கட்காகத்தான் கைது செய்யப்பட்டிருக்கின்றாரே யொழிய சத்யாக்கிரக இயக்கத்திற்காக அல்லவென்றும் பதில் கூறினார்.

### காங்கிரஸ் ஆக்டிங் தலைவர் பதவி

சேத் ஜம்னாலால் பஜாஜ் காங்கிரஸ் ஆக்டிங் தலைவர் பதவியை வகிக்கும் பொறுப்பிலிருந்து தன்னை நீக்கி விடும்படி சர்தார் படேலை வேண்டிக்கொண்டதால் சர்தார் பழையபடி காங்கிரஸ் தலைவர் பதவியை ஏற்றுக்கொண்டார்.

### பாரிஸ்டர் செட்டியார் சுற்றுப் பிரயாணம்

தனவணிகர்களில் பாரிஸ்டர் பட்டம் பெற்ற ஒருவரும் இளைஞரும் சமூகாபிமானியுமான கெ. வி. எ. எல். அழகப்பச் செட்டியாரவர்கள் மலாய் நாடுகளில் சுற்றுப் பிரயாணம் செய்து ஆங்காங்குள்ள தனவணிகர் நிலைமைகளைப் பார்வையிட்டு வருகிறார். 24—6—34ந் தேதி சிரம்பானுக்கு விஜயம் செய்திருந்தாரென்றும் அதுபோது விவேகாநந்த மாணவர் மண்டபத்தில் ஒரு தேநீர் விருந்து நடைபெற்றதென்றும் அதுபோது திரு. சி. மு. ராம. சிதம்பரம் செட்டியாரவர்கள் தலைமையில் நடைபெற்ற கூட்டத்தில் நீண்ட பிரசங்கம் செய்தாரென்றும் தெரிகிறது.

### திரு. குமாரசாமிராஜா வெற்றி

ராஜபாளையம் திரு. P. S. குமாரசாமி ராஜா அவர்கள் இராமநாதபுரம் ஜில்லா போர்டின் உபதலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக் கிறாரெனத் தெரிகிறது.

### தமிழ்நாட்டில் ஹரிஜனப் பாடசாலைகள்

ஹரிஜனங்கட்கு, மேமாதத்தில் தமிழ் நாட்டில் இருபத்தொரு புதுப்பள்ளிக்கூடங்கள் ஆரம்பிக்கப்பட்டன. அவற்றில் ஒன்பது இருப்பது திருச்சி ஜில்லாவில். ஆறு காரைக்குடியில். மூன்று ராமநாதபுரத்தில். இரண்டு கோயமுத்தூரில். ஒன்று வட ஆற்காட்டில். மொத்தம் இப்போது 102 பாடசாலைகளாகின்றன.

Printed and published by Rama Kasinathan for the India Publications Ltd.,
at the Oolian Power Press, 56, Thambu Chetty Street, Madras.

